நடத்திய பரிசோதனைகள் நிரூபிக்கின்றன...







## பிஸ்கட் என்றால் இதுதான் — சுவைக்கும்

## வைட்டமின்களுக்கும் போஷாக்குக்கும் இதுதான்:

பிரிட்டானியா

# க்ளுக்கோஸ்-D



பிரிட்டானியா க்ளுக்கோஸ்-Dயுடன் மற்றொரு முன்னணி க்ளுக்கோஸ் பிஸ்கட்டை ஒப்பிட்டுப் பார்க்க பரிசோதனைகளில் தெள்ளத் தெளிவாக நிரூபிக்கப்பட்டுவிட்டது வைட்டமின் சக்தியிலும், மொத்த போஷாக்குத் தன்மையிலும் உயர்ந்தது க்ளுக்கோஸ்-D பிஸ்கட் தான். இனிமைக்கும், சுவைக்கும், மொறுமொறுப்புக்கும், அதிகமாக விரும்பப்படுகிறது. சக்தி வேண்டுமா— க்ளுக்கோஸையும் விட 20 சதவிகிதம் அதிக சக்தியைத் தருகிறது க்ளுக்கோஸ்-D. பிரிட்டானியா க்ளுக்கோஸ்-D பிஸ்கட்— திகட்டாத சக்தி!




எனவேதான், வேறெந்த க்ளுக்கோஸ் பிஸ்கட்டையும் விட அதிக மக்களைக் கவர்ந்துள்ளது பிரிட்டானியா க்ளுக்கோஸ்-D

பிரிட்டானியா பிரிட்டானியா பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை

லின்டாஸ்-BBC-GL-19-140 TH

வாழ்க்கையிற் ஜயமாக வளம் பெறும் ஆடவர் ஒருவர்...

... அதற்குத் துணை செய்ய அழகான ஆடைகளையும் அணிகிறார் !




நிச்சயமாக, மபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான் !

-M.461 TM

# சங்கீதச்சிரிப்பு



''புல்லாங்குழல் கச்சேரி எந்த சபாவிலே?''

''சபாவிலே இல்லே. எங்க வீட்டிலே ஒரு பாம்பு புகுந்திருக்கு. நீங்க வந்து மகுடி வாசிச்சா அது ஓடிப் போயிடும்!''



''உங்கள் சிஷ்யன் அமெரிக்கா போய்ப் பாடறாரே!''

''அவன் இங்கே பாட முடியாது! அதனாலதான் அமெரிக்கா போய்ப் பாடறான்!''



''எல்லாவிதத்திலேயும் குருவைப் போலவே சிஷ்யன்! இந்த மாதிரி எங்கேயும் பார்க்க முடியாது!''






''ஒன்னுமில்லே! சபா கூரை ஒழுகுது. ஆமா! ஜலதரங்கத்துக்குத் தண்ணீர் வேணுமா?''





''நம்ம சபாவிலே உமக்குக் கச்சேரி சான்ஸா? கட்டுப்படியாகாது. பேசாமெ காண்டீன் வெச்சுடும்!''

''ஒரு நல்ல சேதி! சுநாதனுவிலே என் தவுல் கச்சேரிக்கு உங்க வயலினைப் பக்க'வாத்தியமாப் போட்டிருக்காங்க!''





''உங்க கச்சேரியை டேப் ரிக்கார்டரிலே கேட்டேன். மொத்தம் 13 இடங்களில்...!''

''13 இடங்களில் அப்ளாஸா?''

''பொடி போடும் சத்தம்!''



''கச்சேரியை விட்டு நூறாளுக்கு வெளியே போறதுக்கு டிக்கெட் வெச்சா உம்ம கச்சேரிக்குக் கலெக்ஷன் வாரிண்டு போகும்!''



# கல்கி

ராக்ஷஸ
கார்த்திகை 28

o

டிசம்பர் 14
1975

o

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



★ பாடகருக்கு அருகேபோய் அமர்ந்து பாட்டுக் கேட்க விருப்பம் இவருக்கு. அங்கே ஓர் இடம் காலியாகவும் இருக்கிறது. கூட்டத்தில் பிறருக்கும் இடைஞ்சல் இல்லாமல் எப்படிப் போவதென்று வழி காட்டுங்களேன் இவருக்கு.



★ இசைக் கலையைப்பற்றி உங்களுக்கு எல்லாம் தெரியுமாமே! அப்படியானால் இங்கு என்ன என்ன இசைக் கருவிகள் உள்ளன என்று கூற முடியுமா?

விடை: கடம், தவில், கஞ்சிரா, ஜலதரங்கம், ஹார்மோனியம், வீணை, தம்புரா, மிருதங்கம், பிடில், நாதசுரம், புல்லாங்குழல், மோர்சிங், ஜால்ரா.

## ரவிக்குக் காயம் படும்போது



# ரவியின் அன்னை, நோய் தொற்றாமல் அவனைப் பாதுகாக்க, BAND-AID BRAND டிரஸ்ஸிங்குகளையே நம்புகிறார்.

காயங்கள் திறந்திருந்தால் தொற்று நோய் பரவக்கூடும். எனவேதான், விவேகமுள்ள தாய்மார்கள், காயங்களைப் பாதுகாத்து ஆற்றுவதற்கு பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்குகளை மட்டுமே நம்புகிறார்கள். பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்குகள் நோய்க் கிருமி தொற்றாமல் காயங்களைக் காக்கின்றன. அவற்றிலுள்ள நிருபணமான ஆன்டிசெப்டிக் மருந்து மெர்க்கியூரோக்ரோம், பிளவுபட்ட சருமத்துக்கு இதமளித்து ஆற்ற உதவுகிறது.

பாண்டு-எய்ட்
பிராண்ட்
டிரஸ்ஸிங்குகளை
ஜான்ஸன் & ஜான்ஸன்
மட்டுமே தயாரிக்கிறார்கள்.

Johnson & Johnson*




மெர்க்கியூரோக்ரோம்
மருந்து கலக்கப்பட்டது.

# ராகம்

"தோடி ஏற்கெனவே அழகாக இருக்கும் ஒன்று. சிறந்த கலைஞன் அதனைப் பாடும்போதோ அல்லது இசைக் கருவியில் வாசிக்கும்போதோ அது மேலும் அழகு பெற்றுவிடுகிறது'' என்று அறிஞர் ஒருவர் அழகாகக் குறிப்பிட்டார்.

இக்கருத்து சுந்தா தற்போது எழுதிவரும் பொன்னியின் புதல்வருக்கும் பொருந்தும். 'கல்கி'யின் எழுத்து ஏற்கெனவே சுவையாக இருக்கும் ஒன்று. அதனை அவரது வாழ்வோடு இணைத்துப் பார்த்துச் சாதனைகளோடு சேர்த்துத் தரும்போது அதன் வசீகரம் மேலும் அதிகரித்து விடுகிறது!

சென்ற வாரம் ராஜாஜி இதழில் ராஜாஜியின் வாழ்வில் ஒரு பரபரப்பான கட்டத்தைக் 'கல்கி'யின் கண்ணோட்டத்தில் பார்த்தோம். பொன்னியின் புதல்வர் அத்தியாயம் அப்படிப் பொருத்தமாய் அமைந்தது பற்றி அதிசயித்து ''என்ன சேதி'' பகுதியில் எழுதியும் இருந்தோம். இந்த வாரம் 'இன்னிசைச் சிறப்பிதழ்' என்பதாக அறிவித்துவிட்டுப் பொன்னியின் புதல்வர் அத்தியாயத்தை அச்சுக்குக் கொடுக்க எடுத்துப் பார்த்தால், 'கல்கி'யின் பாடல்களைப் பற்றிய அத்தியாயமாக அது அமைந்திருக்கிறது! இதைக் கண்டு ஆசிரியர் குழாத்தில் அனைவரும் மெய்சிலிர்த்துப் போனோம். இந்தப் பொன்னியின் புதல்வர் அத்தியாயங்கள் என்றைக்கோ எழுதப்பட்டவை. தேதிப் பொருத்தம், சந்தர்ப்பப் பொருத்தம் ஏதும் பாராமல் சுந்தா அவர்கள் எழுதிய போதிலும் முன்கூட்டியே திட்டமிட்டது போல் அத்தியாயங்கள் ராஜாஜி இதழுக்கும் இன்னிசை இதழுக்கும் பொருத்தமாய் அமைந்துள்ளன.

இன்னொரு ரசமான விஷயம். ராஜாஜி இதழுக்கென்று இசை பற்றிய அவரது கருத்து ஒன்றைத் தேர்ந்தெடுத்து ராஜாஜி பக்தர் திரு வி. ச. வாசுதேவன் அனுப்பியிருந்தார். அதனை இன்னிசைச் சிறப்பிதழில் பிரசுரித்துக் கொள்ளலாம் என்று எடுத்து வைத்துவிட்டோம். பிறகு, இந்தச் சிறப்பிதழில் பிரசுரிக்க ஸ்ரீமதி எம்.எஸ் அவர்களின் இண்டியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொசைட்டி தலைமையுரையை எடுத்துப் படித்துப் பார்த்தால் ராஜாஜியின் கருத்து அதிலே அப்படியே பிரதிபலித்திருக்கிறது!

இவையெல்லாம் யதேச்சையாக அமைந்தவையல்ல; அன்பின் ஆழத்தையும் தெய்விகச் சக்தியையும் புலப்படுத்துவன என்று உணர்ந்து மனம் நெகிழ்கிறோம்.

# 'தானம்'

இவ்விதழில் பொன்னியின் புதல்வர் அத்தியாயத்தில் காந்திஜி கூறிய ஒரு விஷயம் தொடர்பாகக் 'கல்கி' அவர்கள் வெளியிட்டுள்ள கருத்துக்களை அனைவரும் மனத்தில் வாங்கிக்கொண்டால் கச்சேரிகளுக்குச் சபாவில் கூட்டமே சேருவதில்லை என்ற குறை அடியோடு நீங்கிவிடும்.

ராக ஞானம், சுவர ஞானம், தாள ஞானம் போன்ற சாஸ்திரீய சங்கீத நுணுக்கங்கள் எல்லா ரசிகர்களுக்கும் தெரிந்திருக்க வேண்டிய அவசியமே இல்லை. 'இது நல்ல பாட்டு', 'இது 'பேஷான வாசிப்பு' என்று இனம் கண்டு கொண்டு ரசித்தாலே போதுமானது. அந்த ஆற்றல் தமிழனாய்ப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் இருக்கிறது. 'சங்கீதக் கச்சேரியா? அதிலே நமக்கென்னய்யா புரியும்?' என்று நினைத்து யாரும் ஒதுங்காமலிருந்தால் போதும் சபை நிரம்பி வழியும்.

ரசிகர்களை ஈர்க்கும் விதமாகவும் அவர்களது ரசனையை வளர்க்கும் விதமாகவும் சபா நிர்வாகிகளும் சில காரியங்களைச் செய்யலாம். ராகம், தாளம், இன்னாரது சாகித்தியம் என்பவற்றைக் குறிப்பிட்டு நிகழ்ச்சி நிரலை அச்சிட்டுத் தருவதுடன் வித்வான், மாறுதல் ஏதும் செய்வதானால் அதனை மைக்கில் அவர் அறிவித்துவிட வேண்டும்

கல்கி

மலர் 35

இதழ் 20



— பாரதியார்

என்ற வழக்கத்தை ஏற்படுத்தலாம். சாகித்தியங்களின் அர்த்தத்தையும் சுருக்கமாக அச்சிட்டுத் தந்தால் அவையோர் இசையில் ஒன்றுவது சுலபமாகும். சிறிய படங்களுடன் சேர்த்து இவற்றை அழகாக அச்சிட்டு விநியோகிக்க அதிகச் செலவு ஒன்றும் ஆகிவிடாது. இன்னும் சபா அங்கத்தினர்களை விமர்சனம் எழுத ஊக்குவித்து அவற்றுள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்துத் தங்கள் ஆண்டு மலரில் பிரசுரிக்கலாம்.

### பல்லவி

சங்கீத சீஸன் ஜாம் ஜாம் என்று ஆரம்பமாகிச் சிறப்பாக நடக்கப் போகிறது. விழாக் கோலாகலத்தின் மகிழ்ச்சியைக் கூட்டும் விதமாகக் கல்கி இன்னிசைச் சிறப்பிதழ் வெளியாகிறது. சங்கீத சாகரத்தின் ஓரிரு அலைகளைத் தொட்டிருக்கிறோம். மற்ற அலைகளைக் கவனிக்கவில்லையே என்று யாரும் கவலைப்பட வேண்டியதில்லை. அடுத்த ஆண்டு அங்குதானே மிதக்க வேண்டும்!

### துக்கடா

★ சுதந்திரக் கட்சியின் தேசியப் பொதுக் குழு சென்னையில் கூடிப் பல தீர்மானங்களை நிறைவேற்றியது. அவற்றுள் ஒன்று: இந்தியக் கல்வி வாரியம் தனக்கு இணையான ருஷ்ய வாரியத்துடன் சேர்ந்து, ருஷ்ய ஆசிரியர்களின் ஒத்துழைப்புடன் இந்தியக் குழந்தைகளுக்குப் பாடப் புத்தகங்கள் தயாரிப்பது என்று ஒப்பந்தம் கையெழுத்தாகியுள்ளது. அரசாங்கத்தின் இந்த முடிவு கவலை அளிப்பதாகும். இளம் உள்ளங்களில் அரசியல் ரீதியான கோட்பாடுகள் இந்தப் பாடப் புத்தகங்களின் வாயிலாகப் புக இடம் தந்து விடக் கூடாதே என்பதுதான் கவலைக்குக் காரணம்.

★ அகில இந்தியப் பத்திரிகை ஆசிரியர்கள் மகாநாடு சில தீர்மானங்களை நிறைவேற்றியுள்ளது. அவற்றில் ஒன்று: பத்திரிகைத் துறையைப் புனரமைப்புச் செய்வது என அரசாங்கம் முடிவெடுத்திருப்பதாகச் செய்தி வெளியாகியுள்ளது. இதுபற்றிப் பத்திரிகை ஆசிரியர்களுடன் அரசு மனம் விட்டுப் பேசவேண்டும் என்று மன்றாடிக் கேட்டுக் கொள்கிறோம்.

மற்றொன்று: ஏகபோக்கியமாக ஒரே ஒரு செய்தி ஸ்தாபனம் மட்டுமே நாட்டில் அமையுமானால் அதனால் எல்லாவிதமான பத்திரிகைகளுக்கும் நேரக்கூடிய ஆபத்தை அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறோம்.

தகவல் ஒலிபரப்புத் துறை மந்திரி இவ் விஷயங்களில் இறுதிமுடிவு எடுக்கும் முன்னர், பத்திரிகை ஆசிரியர்களின் கருத்துக்களுக்குச் செவி சாய்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

★ கடனாக அன்றிக் குறிப்பிட்ட காரியங்களை நிறைவேற்ற மான்யமாகவே பிரிட்டன் ரூ. 167.7 கோடி இந்தியாவுக்குத் தந்துள்ளது. அமெரிக்கா கடனாகக் கொடுத்த தொகைகளைச் சில சந்தர்ப்பங்களில் திருப்பித் தரவேண்டாம் என்று விட்டுக் கொடுத்திருப்பது உண்மையே. ஆனால் அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளுக்கு மான்யமாகவே தொகை வழங்கி உதவுகிற கொள்கையை ஸ்வீடன், பிரிட்டன் தவிர இதர நாடுகள் ஏற்கவில்லை. ஸ்வீடன் ஓரளவுக்கும் இப்போது பிரிட்டன் கணிசமான அளவிலும் உதவியுள்ளன. அதிலும் பிரிட்டனுடைய பொருளாதாரமே சற்றுக் கவலைக்கிடமாக இருக்கும் சமயத்தில் அந்நாடு இவ்வாறு உதவ முன்வந்த பெருந்தன்மையைப் பாராட்டி மகிழ்கிறோம். மானியமாகக் கிடைத்த தொகை நாட்டுக்கு மட்டற்ற பயன் தரும் விதமாகச் செலவாகட்டும்.

★ உத்தரப்பிரதேசத்தில் முதல்வர் பகுகுணா ராஜிநாமாச் செய்ய, ராஷ்டிரபதி ஆட்சி அமலுக்கு வருகிறது. உருவாகும் தலைமைக்கும் உருவாக்கப்படும் தலைமைக்கும் உள்ள வேறுபாட்டை இந்நிகழ்ச்சி மீண்டும் உணர்த்துகிறது.

---

ராஜாஜி சிந்தனை

## துணைவேந்தர் கவனத்துக்கு!

சங்கீதத்தினுடைய பிறப்பிடம் மதமேயாகும். இன்னும்கூட அதனுடைய வேர் மதத்தில்தான் இருக்கிறது. எனவே இசை என்பது ஒரு நாட்டினுடைய கலா சாரத்தின் இன்றியமையாத அம்சமாகும். கேட்டு அனுபவிக்க வேண்டிய கலை மட்டும் அல்ல சங்கீதம். ஆண்களும் பெண்களும் பெறவேண்டிய கல்வியில் அவசியமாக இடம் பெறவேண்டிய ஒன்றாகும்.

ராகத்திலும் தாளத்திலும் பயிற்சி பெறுவது ஒருவனுடைய குணமும் நடத்தையும் உருவாகத் துணை புரிகிறது. கருணையையும் பக்தியையும் வளர்க்கவும் பலப்படுத்தவும் சங்கீதமும் நடனமும் சிறந்த சாதனங்களாக விளங்குகின்றன. குழந்தைகளுக்குச் சங்கீதமும் நடனமும் கற்றுத்தரப் பெற்றோர்கள் விருப்பத்துடன் முன்வர வேண்டும். பணம் செலவழியுமே என்று தயங்கக் கூடாது.

நூல்: ''ராஜாஜி பேசுகிறார்''



# பரிசு! — அதிலும் ஒரு சலுகை!

"கல்கி கதம்பம் என்ற புத்தகத்தை இலவசமாகப் பெற கல்கி பத்திரிகைக்கு இரண்டாண்டுச் சந்தாவை மகிழ்ச்சியோடு அனுப்பி வைக்கத் தயாராக இருக்கிறோம். ஆனால் ஒரே சமயத்தில் ரூ. 76 புரட்டுவதுதான் சற்றுச் சிரமமாயிருக்கிறது" என்று பல அன்பர்கள் எழுதியிருக்கிறார்கள். எனவே இத்தகையவர்களுக்கு ஒரு விசேஷச் சலுகை வழங்குகிறோம்.

**சந்தாத் தொகையை இரண்டாகப் பிரித்து டிசம்பர் 15ம் தேதிக்குள் ரூ. 38/-ம், ஜனவரி 15ந் தேதிக்குள் ரூ. 38-ம் அனுப்பினால் போதுமானது. இரண்டாவது தவணையாக ரூ. 38/- எங்களுக்குக் கிடைத்ததும் பரிசு நூலினை அனுப்பி வைக்கிறோம். ஒரே தவணையில் டிசம்பர் 15ந் தேதிக்குள் அனுப்புவதானாலும் தடையில்லை. பரிசு நூல் முன்னதாகவே உங்களை வந்தடையும்.**

**கல்கி கதம்பம்** என்ற அரிய நூலைப் பற்றி:

★ **அமரர் கல்கி அவர்களின் சிறுகதைகள், பயணக்கட்டுரை, நகைச்சுவைக் கட்டுரை, கவிதை, சினிமா விமர்சனம் போன்ற அவரது நவரச எழுத்துக்களும் இதில் மணம் வீசுகிறது.**

★ **கல்கி பத்திரிகை அளவில் 160 பக்கங்கள்** ★ **வண்ணப் படங்கள்**

★ **உயர்ந்த காகிதம்** ★ **கனமான மேலட்டை**

★ **எந்த ஒரு நூலகத்தையும் பெருமிதத்துடன் அலங்கரிக்கக்கூடிய எடுப்பான தயாரிப்பு.**

சந்தாத் தொகையை மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை—600031 என்ற விலாசத்துக்கு மணியார்டர் செய்யவும். சென்னைவாசிகள் 'செக்' அனுப்பலாம்.

இச்சமயத்தில் நீங்கள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்வதன் மூலம் மற்றும் ஒரு பலனையும் அடைகிறீர்கள்.

**கண்ணதாசன்** எழுதும் மகோந்நத சரித்திர நவீனமாகிய **சேரமான் காதலி** கல்கி டிசம்பர் 7உ. இதழில் ஆரம்பமாகிறது. இந்தத் தொடர்கதையை ஓர் இதழ்கூட விட்டுப் போகாமல் தொடர்ந்து படித்து வருகிற வசதி ஏற்படுகிறது.

அது மட்டுமா? சேரமான் காதலியோடு கல்கியில் இடம்பெறுகிற வேறு பல சுவையான சிறப்பு அம்சங்கள், சிரிப்புப் பகுதிகள், உயர்தரமான சிறுகதைகள், புதிய தொடர்கதைகள் முதலியவற்றையெல்லாமும் அடுத்த 104 இதழ்களில் படித்து மகிழலாம் அல்லவா?

இந்த அரிய சந்தர்ப்பத்தைத் தாங்கள் கைநழுவ விடவே மாட்டீர்கள் என நம்புகிறோம்.

நினைவிருக்கட்டும்! தேனினும் இனிய நடையில் **கண்ணதாசன்** எழுதும் **சேரமான் காதலி**; அத்துடன் இலவசமாகக் **'கல்கி கதம்பம்'** என்னும் அரிய பொக்கிஷம்!



குறிப்பு: ஏற்கனவே கல்கி சந்தாதாரராக இருப்பவரும் தங்கள் சந்தாவை மேலும் இரண்டாண்டுகளுக்குப் புதுப்பித்துக் கொண்டு இந்த **அன்பளிப்பைப் பெறலாம்.**

# புராண கைங்கரியம்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்



**நா**ன் ரொம்பப் பேராசைப்படவில்லை. உங்களை எல்லாக் காரியங்களையும் விட்டுவிட்டு ஸதா ஸர்வதா ஈசுவரத் தியானத்திலேயே இருக்க வேண்டும் என்று நான் கேட்கவில்லை. (கேட்டாலும் அடியோடு ஒன்றுமே நடக்காது) தினந் தினமும் ஒரு பத்துப் பதினைந்து நிமிஷங்களாவது பகவானுக்காகக் கொடுங்கள் என்றுதான் கேட்கிறேன். சின்னதாக ஒரு பூஜை, ஆலய தரிசனம், பஜனை இப்படி ஏதாவது ஒன்று அன்றன்றும் இருக்க வேண்டும். பாபத்தை மேலே மேலே குவித்துக் கொள்கிற இடம்தான் லோக வாழ்க்கை என்றில்லாமல், ஏற்கனவே சேர்த்துக் கொண்ட பாபங்களை அலம்புகிற இடமாக இனி மேலாவது இதை ஆக்கிக் கொள்ள வேண்டுமானால் அதற்கு வழி ஏதாவது ஒரு விதத்தில் ஈசுவர ஸ்மரணையை உண்டாக்கிக் கொள்வதுதான். மற்ற நேரங்களில் லோக காரியங்கள் இருக்கட்டும். இந்தப் பத்து நிமிஷங்கள் மட்டும் லோகமே முழுகிப் போனாலும் பரவாயில்லை என்று பகவத் தியானத்துக்கே கொடுத்துவிட்டால் போதும். லோகம் முழுகினாலும் இதுவே நம்மைத் தூக்கிக் கரையில் போட்டுவிடும். நாம் கொஞ்சம் இந்த வழியில் பிரயாசை, பிரயத்தனம் மனமார (ஸின்ஸியராக) மட்டும் பண்ணிவிட்டால் போதும், அம்பாளே கைகொடுத்து நம்மை மேலே மேலே அழைத்துப் போவாள்.

தனியாகத் தியானம் பண்ணுவது ஒன்று. கூட்டு வழிபாடு இன்னொன்று. மற்ற மதங்களில் கூட்டுப் பிரார்த்தனை ஜாஸ்தி. அதனால் அவர்கள், 'ஹிந்துக்கள் அவரவரைக் கடைத்தேற்றிக் கொள்வதோடு ***(Individual Salvation)*** நின்று விடுகிறவர்கள்; அவர்களுக்குச் சமூக உணர்ச்சியே கிடையாது' என்றுகூடச் சொல்வதுண்டு. தனி மனிதன் தன்னைச் சுத்தப்படுத்திக் கொள்ளாமல், லோகத்தை எல்லாம் சுத்தமாக்குகிறேன் என்று கிளம்பினால் ஒரு பலனும் கிடைக்காது. முதலில் இவன் பூரணத்துவம் பெற வேண்டும்; நிறைய வேண்டும். அப்புறம்தான் மற்றவர்கள் குறையைத் தீர்க்க இவனுக்குத் தகுதி, அருகதை உண்டாகிறது. இவன் மட்டும் நிறைந்துவிட்டானானால் அப்புறம் லோகத்துக்காக இவன் **காரியம்** செய்ய வேண்டும் என்பதுகூட இல்லை. இவனுடைய ஆத்ம சக்தியாலேயே வெளியிலும் நல்லது ஏற்பட்டு விடும். இவன் சொல்லாமலே இவனை ஓர் உதாரணமாக, மாடலாக வைத்துக்கொண்டு மற்றவர்கள் தங்களைத் திருத்திக் கொள்வார்கள். அல்லது இவன் காரியமாகவேகூட லோக கல்யாணத்தைச் செய்யலாம். ஆசாரியாள், ஆழ்வார்கள், நாயன்மார்கள் எல்லோரும் இப்படித்தான். தாங்கள் நிறைந்த பிற்பாடு ஊர் ஊராகச் சஞ்சாரம் செய்து ஆஸ்திக்யத்தைப் பரப்பினார்கள். ஆகையால் 'தன்னை மட்டும் கடைத்தேற்றிக் கொள்வது சுயநலம்' என்பது சரியில்லை. அதுதான் ரொம்ப ரொம்பப் பர நலத்துக்கு உதவியிருக்கிறது.

ஆனால் தன்னைக் கடைத்தேற்றிக் கொள்வதானால் தனியாகத்தான் அதைச் செய்ய வேண்டும் என்பதில்லை. தியானம், யாகம், தபஸ், மந்திர ஜபம் என்று ஏகாந்தமாகச் செய்கிற சாதனைகள் இருப்பது வாஸ்தவம்தான். ஆனால் அவை மட்டும்தான் நம் மதம் என்பது சரியில்லை. ஸத்ர யாகம் மாதிரிப் பல யக்ஞங்கள் பலர் சேர்ந்து செய்த காரியங்கள்தான். தேவாலய பூஜை, திருவிழா எல்லாமும் சங்க வழிபாடுதான். ஆரம்ப காலத்தில் தனியாக உட்கார்ந்து சாதனை பண்ணுவதைவிட, இப்படிப் பல பேராகச் சேர்ந்து செய்கிற போதே அதில் ஜாஸ்தி ஈடுபாடும் பலனும் உண்டாகின்றன. எல்லோரும் சேர்ந்து ஒரு பஜனை செய்கிறோம்; அல்லது ஓர் உத்ஸவம் நடத்துகிறோம் என்றால் அப்போது அவரவர்களுக்கும் நல்ல திவ்விய ஸ்மரணை ஏற்படத்தான் செய்கிறது. தனியாகச் செய்வதைவிடக்கூட, இந்தக் கூட்டு வழிபாட்டில் ஜாஸ்தி உற்சாகம் இருக்கிறது. அவரவருக்கும் ஆத்ம சிரேயஸ் உண்டாவதோடு எல்லோரும் ஈசன் குழந்தைகளாக அன்பிலே ஒன்று சேருகிற ஒரு பெரிய சமூக லாபமும் இதில் கிடைக்கிறது. **ஸத்ஸங்கம், ஸத்ஸங்கம்** என்று பலர் கூடிச் செய்கிற நல்ல காரியங்களுக்கு ரொம்பவும் சக்தியிருப்பதாகப் பெரியவர்கள் யாவரும் சொல்லியிருக்கிறார்கள். இம்மாதிரி பஜனை, ஆலய வழிபாடு இவைகளைச் சங்கமாகச் செய்வதோடு புராண சிரவணத்தையும் சேர்த்துக் கொள்ளச் சொல்கிறேன்.

வால்மீகி, வியாஸாதி மகரிஷிகள், தமிழ் நாட்டில் கச்சியப்ப சிவாசாரியார், சேக்கிழார் போன்ற பெரியவர்கள் எத்தனையோ புராணங்களை நமக்குக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறார்கள். பகவானைப் பற்றியது, அடியாரைப் பற்றியது, இன்னம் க்ஷேத்திரங்கள், தீர்த்தங்கள், மாசங்கள் இவற்றின் மகிமையைச் சொல்வது என்பதாக ஏராளமான புராணங்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. இவற்றில் கதைக்குக் கதை, பக்திக்கு பக்தி, தத்துவத்துக்குத் தத்துவம் என்று எல்லாம் கலந்து நமக்குக் கேட்கக் கேட்க சுவாரஸ்யமாகவும், அதே சமயத்தில் ஆத்ம லாபம் தருவதாகவும் இருக்கின்றன. இந்தப் பெரிய குல தனத்தை நாம் வீண் போக விடக் கூடாது. (தொடரும்)

---

சென்ற வாரம் அருள்வாக்கில் Jehovah, Jove on land என்று இருப்பதை Jehovah, Jove or Lord என்று திருத்தி வாசித்துக் கொள்ளவும். பிழை சேர்ந்ததற்குப் பெரிதும் வருந்துகிறோம்.

— ஆசிரியர்

# தெய்வமாக் கலை

**ஸ்ரீமதி பாலசரஸ்வதி அரங்கேறி இந்த வருஷத்துடன் ஐம்பதாண்டுகள் ஆகின்றன. இந்தப் பொன் விழா ஆண்டில் அவர் தமிழிசைச் சங்கத்தின் இசை விழாவில் தலைமையுரை நிகழ்த்துகிறார். அந்த உரையிலிருந்து சில பகுதிகள் :**

**நா**ன் அறிந்த அளவில் பரதக் கலை என்பது பக்திதான்; தமிழ் என்பதும் பக்தியன்றி வேறில்லை. எனவே தமிழ் மரபும் பரத மரபும் ஒன்றே என உணர்கிறேன்.

சிலப்பதிகாரத்தில் பேசப்படும் கொடுகொட்டி முதல், கடையம் ஈறான பதினொரு வகைக் கூத்துகளும் சிவபெருமான், திருமால், முருகன், காமன், கொற்றவை எனப்படும் பராசக்தி, திருமகள், இந்திராணி ஆகிய தெய்வங்களே புரிந்த ஆடல்களாகும். தீமையை வென்று நன்மையை நிலைநாட்டு முகமாக ஒவ்வொரு தெய்வமும் அசுர சம்ஹாரம் செய்து வெற்றி கண்டதையே இப்பதினொரு ஆடல் வகைகளும் விளக்குகின்றன. தீய சக்திகளைத் தீய்த்து, தூய ஆன்ம நெறியைத் தழைக்கச் செய்யும் தெய்வமாக்கலையாகவே தமிழரால் நாட்டியம் கொள்ளப் பட்டிருப்பதற்கு இதைவிடச் சான்று வேண்டுமா?

துச்சமானது என்று கருதப்படும் சரீரத்தையே தெய்விகமாக்குவதுதான் பரதக் கலை. யோகிகள் மூச்சை அடக்கியும் காயக் கிலேசம் செய்தும் தங்கள் மேனியையே தெய்வீகத் திருமூர்த்தம் ஆக்கிக் கொள்கின்றனர் எனில், ஒரு நடியானவள் லயத்தாலும் பண்ணாலுமே அவற்றில் எந்த அளவுக்கு ஊறிக் கரைந்து ஐக்கியப்பட்டிருக்கிறாளோ அந்த அளவுக்கு, ஆடல் புரிகிற அந்தக் காலத்தில் மட்டுமாவது தன் உடலையே தெய்வீக ரஸானுபாவங்களின் கருவியாக்கிக் கொள்கிறாள்.

சம்பிரதாயமாக நமக்கு வந்துள்ள பரதக் கச்சேரிக் கிரமமான அலாரிப்பு — ஜதிஸ்வரம்— சப்தம் — வர்ணம் — பதங்கள் — தில்லானா — பதிகம், பாசுரம் அல்லது சுலோகம் என்ற அமைப்பு முறையே மேற்சொன்னவாறு தேகத்தால் தெய்வீகத்தை மலர்த்தும் கலா யோக ஸாதனையின் ஒழுங்கான படிவரிசை என்றே கருதுகிறேன்.

இந்த அமைப்பைக் கலைக் கண் நோக்கிலேயே பார்த்தாலும் அதன் சிறப்புத் தெரியும். முதலில் லயம் மட்டும் கொண்ட அலாரிப்பு. ஒருமுகப்படவைப்பதில் லயத்துக்கு ஒரு தனி ஆற்றல் உண்டு. லயிக்க வைப்பதால்தான் அதற்குப் பெயரே லயம். நடியின் சித்தம் பலவாறாகச் சிதறாமல் ஒருமுகப்பட அலாரிப்பு பேருதவி புரிகிறது.

முதலில் தனியான லய இன்பம். பிறகு அதனோடு பண் இன்பமும் கலந்த ஜதிஸ்வரம். மொழியும் சொல்லும் இல்லாத வெறும் இசைக்கே நம்மைத் தன்னோடு இசைத்துக் கொள்ளும் சக்தி உண்டு. அது ஜதி ஸ்வரத்தில் ஆடலோடு கலந்து வருகிறது. பிறகு சப்தம். இங்கேதான் பரத நாட்டியத்துக்கே உரித்தான லலித ரஸங்களைக் காட்ட சொல்லும், பொருளும் கொண்ட சாஹித்தியமும் வந்து சேருகிறது.

மகத்தானதோர் ஆலயம் போல் நிர்மாணிக்கப்பட்ட பரதக் கச்சேரிக் கிரமத்தில் அலாரிப்பு என்ற கோபுர வாயில் வழியே பிரவேசித்து, ஜதிஸ்வரம் என்ற அர்த்த மண்டபத்தையும், சப்தம் என்ற மகாமண்டபத்தையும் கடந்து வந்தால், புனிதத்திலும் புனிதமான தெய்வ சந்நிதானத்தில் வர்ணம் வருகிறது. லய ஜதிகளைக் கொட்டவும், பாவ அபிநயங்களைப் பொழியவும் விஸ்தாரமாக இடம் கொடுக்கும் சந்நிதானம் அது.

இதன் பின் பதங்கள். சந்நிதியிலிருந்து கர்ப்பக்கிருகத்துக்குள்ளேயே புகுந்தவுடன் ஏற்படும் ஓர் அடக்கம், குளிர்ச்சி, அமைதி, இந்தப் பதங்களுக்கு அபிநயம் புரியும்போது ஏற்படுகிறது. சந்நிதானத்தின் வெளிச்சுற்றிலே இருந்த விஸ்தாரமும் ஜாஜ்வல்யமும் கருவறைக்குள் அடங்கிவிடுவது போல், வர்ணத்தின் லயக் கொழிப்புக்களும் அடங்கி, நெஞ்சைக் கவ்வும் இசைப் பாடலோடு அபிநயம் இங்கே இழைந்து வருகிறது. அடுக்கு தீபாராதனைகளும், மேள தாளங்களும் நின்று ஆண்டவன் பக்கத்தில் வெறும் மறை மந்திரங்கள் மட்டும் ஓதப்படுவது போன்ற ஒரு கட்டம் பதங்கள் ஆடும் பகுதி. பிறகு இறைவனுக்கு நேர் முன்னரே கர்ப்பூர ஆரத்தி காட்டுவது போல், தில்லானா வருகிறது. முடிவாக, புறத்தில் வழிபடும் இறைவனை அகத்துள் இறக்கிக் கொள்வது போல், விருத்தமாக அமைந்த பக்திப் பாடல் ஒன்றை அபிநயிப்பது பத்ததி.

அபிநய உணர்ச்சிகளில் சிருங்காரம் தலையான இடத்தைப் பெறுகிறது. ஏனென்றால் ஜீவாத்மா பரமாத்மாவுடன் சேருவதற்கு சிருங்காரத்தை விடச் சிறந்த உருவகம் இல்லை. சிருங்காரம் கலவாத உருக்கமான பக்தி ததும்பும் ''எந்நேரமும் உன்றன் சந்நிதி'', ''வருகலாமோ?'', காந்திமதி பிள்ளைத்தமிழ், தாயுமானவர் பாடல்கள், ''கிருஷ்ணா நீ பேகனே பாரோ'' முதலிய பாடல்களில் கரைந்து அபிநயிப்பதில் உள்ள ஆழ்ந்த அநுபவத்தை அறிந்த நானேதான் இப்படிச் சொல்கிறேன்.

ஸ்ரீமதி பாலசரஸ்வதி






**இவ்வாண்டு இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் ஸொஸைட்டியின் மகாநாட்டில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் தலைமை உரையில் சில பகுதிகள்:**

இன்றைய உலகத்தின் பெரிய கோளாறு உணர்ச்சிகளை வகை தொகையாகக் கட்டுப் படுத்திக் கொள்ள முடியாததுதான் என்று பெரியவர்கள் யாவரும் சொல்கிறார்கள். 'மத ஒழுக்கங்களுக்குக் கட்டுப்பட்டு ஜனங்கள் வாழ்ந்தவரையில், எங்கும் சாந்தியும் சௌஜன்யமும் இருந்தன. அந்தப் பெரிய கட்டுப்பாடு தளர்ந்த பின், பலவிதமான உணர்ச்சி மோதல்களுக்கு மக்கள் ஆளாகி, உலகம் முழுவதிலுமே நிம்மதி யின்மையும், தத்தளிப்பும் உண்டாகி விட்டன' என்கிறார்கள். ஆனாலும், இதற்குப் பரிகாரம் காண்பதுதான் மிகவும் சிரமமாக இருக்கிறது. நவீன காலத்தவர்கள் மனமொப்பி, மத, சாஸ்திரக் கட்டுப்பாடுகளை ஏற்குமாறு செய்வது பிரம்மப் பிரயத்தனமாக இருக்கிறது. இங்கேதான் ஸங்கீதம் அற்புதமாகக் கைகொடுக்க வருகிறது என்று காண்கிறேன். பகவானிடம் மனத்தைக் கொடுத்து ஒருவர் பாடுகிறார் என்றால், அப்போது ஆயிரம் பதினாயிரம் பேர் அதைக் கேட்டு அப்படியே லயித்து விடுகிறார்கள். அவர்களுடைய உணர்ச்சிக் கொந்தளிப்புகள் யாவும், அப்போது போன இடமே தெரியாமல் மறைந்து விடுகின்றன. இது தாற்காலிகமாகவே இருந்தாலும் கூட, அந்த அளவுக்கேனும் ஒவ்வொருவருக்கும் ஆத்ம சாந்தி கிடைக்கத் தானே செய்கிறது? ''உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி அதற்கான சாஸ்திர விதிகளைக் கொடுத்தால் ஏற்க மறுக்கிற நவீனர்களும் கூட, தெய்விகமான ஸங்கீதத்தைக் கேட்கும் போது, அலையும் சித்தம் சமனமாகி ஆத்ம திருப்தி காண்கிறார்கள். உணர்ச்சிகளைச் சமனப்படுத்தி, தெய்வத்திடம் திருப்பிவிட ஸங்கீதத்தைப் போல் ஸுலபமான, ஸௌக்கியமான சாதனம் வேறு எதுவும் இல்லை.

நம் தேசத்தில் லௌகிக விஷயங்களுக்கான விளையாட்டுப் பாட்டாகவோ, ஒப்பாரியாகவோ இருந்தால் கூட சரி, அதிலும் அங்கங்கே பகவானைத் தொடாமல் இருக்க மாட்டார்கள். ஒரு தெம்மாங்கு, நொண்டிச்சிந்து என்று எடுத்துக் கொண்டாலும் சரி, அதிலும் ஒரு காத்தவராயன், கருப்பண்ணசாமி, துரோபதையம்மன் பிரஸ்தாபம் இல்லாமற் போகாது. நமக்கெல்லாம் மூலமான அந்த மஹா சக்தியை இப்படி அப்போதப்போது இசையினால் ஸ்பரிசித்துக் கொண்டிருந்தாலே போதும். நன்னெறி, ஒழுக்கம், ஆத்ம க்ஷேமம், ஸமூக சாந்தி, பரஸ்பரம் பிரேமை எல்லாம் வளர்ந்துவிடும்.

குழந்தைப் பருவத்திலிருந்தே பக்தியான ஸங்கீதத்தில் ருசி ஏற்படுத்தி, அதை அப்யஸிக்கச் செய்துவிட்டால், தரக் குறைவான இரைச்சல் இசைக்கு மனம் போகாமல் தடுத்து விடலாம். பள்ளிக்கூடத்தின் ஆரம்ப வகுப்பிலிருந்து கல்லூரிக் கல்வி முடியும் வரையில் ஸங்கீத போதனையை எல்லா மாணவர்களுக்கும் கட்டாய பாடமாகவே வைக்கலாம்.

இதனால் அனைவருமே பிரபல வித்வான்களாக மேடை ஏறிப் பாடவேண்டும் என்பதில்லை. இப்போது கணிதம் படிப்பவர் எல்லோருமே ராமானுஜமாகவும், ஸயன்ஸ் படிக்கிற எல்லோருமே ஸி. வி. ராமனாகவும் ஆகிவிடுகிறார்களா என்ன? அதே போல் ஸங்கீதம் பயிலும் ஒவ்வொருவரும் அரியக்குடியாகவும் செம்மங்குடியாகவும் ஆக வேண்டுமென்பதில்லை. ஸயன்ஸ் போன்ற சாஸ்திரங்களைப் பயில்வதால் அவரவருக்குமே அறிவு வளர்வது போல், இசைப் பயிற்சி அவரவருக்கும் உள்ளூற ஓர் ஆத்மிக மலர்ச்சியை அளிக்கும். எனவே இவ்விஷயத்தை இன்று இம்மகாநாட்டைத் தொடங்கி வைக்க வந்துள்ள துணை வேந்தர் டாக்டர் ஆதிசேஷய்யா அவர்களின் ஆலோசனைக்கு வலியுறுத்துகிறேன்.

இது தவிர, இவ்விஷயத்தில் தாய்க் குலத்துக்கு ஒரு தனிப் பொறுப்பு உண்டு. இசை என்பது விசேஷமாகப் பெண் குலத்தின் பெருஞ் சொத்தாகும். ஸங்கீதத்தின் அதிதேவதையே சரஸ்வதி தானே? ஸர்வதேச மாதர் ஆண்டிலேயே ஸர்வதேச ஸங்கீததினம், ஸங்கீதவாரம் ஆகியனவும் அமைந்தது இசை வளர்ச்சியில் பெண் மக்களின் பொறுப்பை எடுத்துக் காட்டுவதாகவே கருதுகிறேன். பழங்காலத்தில் பாட்டிமார்கள் குழந்தைகளுக்குப் பாட்டுக்கள் மூலமே பக்தி ஊட்டியதைப் போல், இக்கால அன்னையரும் செய்தால் ஸங்கீதமும் வளரும், ஸத்பக்தியும் வளரும். தங்கள் குழந்தைகளை இப்படிக் கலையாலும், தெய்வ பக்தியாலும் வளர்ப்பதே பெண்கள் செய்யக் கூடிய மிகப் பெரிய சமூக சேவை எனலாம்.

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி





# அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில், மதுரை

## <u>கோடி அர்ச்சனை</u>

நாடு வளம்பெற, மக்கள் நல்வாழ்வு பெற்று மகிழ, அறம் தழைக்க, நல்லாட்சி நிலைபெற, எல்லா உயிர்களும் இன்புற்று வாழ அருள்மிகு மீனாட்சி அம்மனுக்கு கோடி அர்ச்சனை, வரும் 7-12-1975-ம் தேதி முதல் நடைபெறுகிறது. அன்பர்கள் அனைவரும் இக் கோடி அர்ச்சனையில் பங்கு கொண்டு அன்னையின் திருஅருள் நோக்கும், புனித பிரசாதமும் பெற வேண்டுகிறோம்.

**சகஸ்ரநாமம் அர்ச்சனை டிக்கட் 1க்கு ரூ. 15.00**
**லட்சார்ச்சனை செய்ய ... ரூ. 1,500.00**

திரு என். பொன்னப்பன் அவர்கள்
தலைவர், அறங்காவலர் குழு

திரு டி. தியாகையா அவர்கள்
திரு ஆர். கோபால்சாமி அவர்கள்
திரு கே. எஸ். இராமகிருஷ்ணன்,
எம். எல். ஏ., அவர்கள்
திரு எம்.பி என். பொன்னுச்சாமி அவர்கள்
அறங்காவலர்கள்

ஆர். திருவேங்கடசுவாமி,
உதவி ஆணையர்/நிர்வாக அதிகாரி



# சேரமான் காதலி

கண்ணதாசன்

**சென்ற வாரக் கதை :**

சேரநாட்டின் தலைநகரமான வஞ்சியில் கி.பி. 754ம் ஆண்டில் இரண்டாம் சேரமான் பெருமாள் அரியணை ஏறி ஆட்சி செலுத்தினார். அவரது ஆட்சிக் காலத்தில், சேர நாட்டின் ஆட்சி முறை சோழ, பாண்டிய நாட்டில் இருந்தது போல் இருக்கவில்லை. சேர நாட்டின் ஒவ்வொரு கிராமமும் ஒவ்வொரு நம்பூதிரியின் கையில் இருந்தது. அனைத்து நம்பூதிரிகளுக்கும் சேர்த்து வஞ்சியிலே ஒரு தலைமையகம் இருந்தது. அந்தத் தலைமையகத்தின் தலைமைப் பீடத்தில் அமர்ந்திருந்த தலைவர் நாராயண நம்பூதிரி.

நாராயண நம்பூதிரியைப் பிரதம மந்திரியாகவும், இரண்டாம் சேரமான் பெருமாளைக் குடியாட்சித் தலைவராகவும் தற்கால அரசியல் அமைப்புப்படி கொள்வது பொருத்தமாக இருக்கும்.

இளவரசன் மார்த்தாண்ட வர்மனுக்கு ஆறு வயதாகும்போது மன்னர் சேரமான் பெருமாளின் மனைவி - பட்டத்து ராணி - காலமானார். மன்னர் மறுமணம் செய்து கொள்ளவில்லை. அந்தப்புரத்தில் அவருக்கு வேறு ஆசைநாயகிகளும் இல்லை.

சேரநாட்டில் பல்லவ நாட்டிலிருந்து ஏராளமான வைணவர்கள் குடியேறியிருந்தார்கள். மன்னர் சேரமான் பெருமாளும் வைணவர்தான்.

அரண்மனை வழிபாட்டு மண்டபத்தில், ஒருபுறம் திருவரங்கப் பெருமாளும், மறுபுறம் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீமந் நாராயணனும் திருக்கோயில் கொண்டிருந்தார்கள். மன்னர், திருவரங்கப் பெருமாளை உளம் நெகிழ்ந்து பாடிப் பரவி முடிந்ததும், தாம் திருமால் கோவில் கொண்டிருக்கும் திருத்தலங்களையெல்லாம் தரிசிக்கப் புறப்பட இருக்கும் செய்தியை அறிவித்தார். அரச சபையில் இருந்தவர் அனைவரும் கண்கள் நீர்மல்க நின்றனர்.

அப்பொழுது மன்னரின் மைத்துனரின் மகனை பாஸ்கர ரவிவர்மன் 'ஓ'வென்று அழுதான். அவன் அழுவதைக் கண்டு திகைத்த மன்னர், "பாஸ்கரா, நீயா அழுகிறாய்? இந்தத் தல யாத்திரையில் ஒருவேளை நான் பட்டத்தைத் துறந்தாலும் என் மகன் மார்த்தாண்ட வர்மன்தான் ஆட்சி பீடத்தை அலங்கரிப்பான்" என்றார்.

பாஸ்கரன், பதில் கூறாது தலைகுனிந்தபடி நின்றான். கூட்டம் துயரத்துடன் கலைந்தது. பிறகு தனியாக நின்ற பாஸ்கர ரவிவர்மன் அரண்மனையை ஒட்டிய தென்னந் தோப்பில் சிறிது நேரம் உலாவிவிட்டு, தலையை முக்காடிட்டு மறைத்துக் கொண்டு யூதர்கள் வாழ்ந்த பகுதியை நோக்கிப் போய் ஓர் அழகிய இல்லத்தை அடைந்தான். அங்கு வாசற் படிக்கட்டில் வடித்தெடுத்த சிலையென யூஜியாறு அமர்ந்திருந்தாள்.

## அத்தியாயம் 2

# தூங்காத இரவுகள்

பூஜியாரு —

''கம்பியன் கையாலடித்துக் காய்ச்சி வெட்டித் தீராமல் செம்மலரோன் — கைமலரால் செதுக்கிவிட்ட பொற் பாவை''. சுருண்டு நீண்ட கேசங்கள்; ஜோதிப் பிறை போன்ற நெற்றி ; சிறிய கரிய ரோமங்களால் பாத்தி கட்டப் பட்ட அழகான புருவங்கள்; பளபளக் கும் முத்துச் சிப்பியைப் போன்ற இமைகள்; காண்பவர்களைத் தம்மை மட்டுமே காணச் சொல்லும் கண்கள்; அவள் சிரிக்க வேண்டாம்; அந்தக் கண்களே சிரித்துக் கொண்டிருக்கும். தாமிரபரணித் தண்ணீரிலே மீன் மிதப் பது போல் அந்தக் கண்கள் மிதந்து கொண்டிருக்கும். அந்தக் கண்களில் ஆனந்தக் கண்ணீர் இருப்பது போன்ற பிரமை ஏற்படும். தண்ணீர் இருப்ப தாகப் பாண்டவர்களை மயக்க வைக்க மயன் எழுப்பிய மாளிகையைப் போல் விசித்திரமான அற்புதமான கண்கள் அவை.

சிவப்புக் குழம்பிலே தோய்த்த பஞ் சைச் சிறிய அளவிலே சுருட்டி வைத்த தைப் போன்ற இதழ்கள். கேரள மாதர் களைப் போலவே மஞ்சள் வெய்யில் காட் டும் மங்காத மேனி. கழுத்திலே சூடிக் கொண்டிருக்கும் ஓர் அழகான மழைத் தேவதையின் சிலை. பட்டை தீட்டிய வைரங்களுக்கிடையே அந்தச் சிலை அசைவது அவளது மொத்த வடிவத் துக்கு ஒரு சிறிய உதாரணமாகத் திக ழும். ஜரிகை வேய்ந்த பட்டாடை ஒன்று உடம்பை மறைக்க வேண்டிய அளவுக்கு மறைத்துக் கொண்டிருக்கும். 'நல்ல வேளை, அது முகத்தை மறைக்க வில்லையே!' என்றுமகிழ்ந்தவர்கள்உண்டு.

வலது பாதத்தில் அவளுக்கு ஆறு விரல்கள். அந்த ஆறுவது விரல் அவ ளுக்கு அரச போகத்தைத் தரப் போகி



றது என்று அவள் தந்தை யோகோவா அடிக்கடி சொல்வார்.

யூதப் பெண்ணுக்கு அழகு இயற்கை தான் என்றால், இந்த ஏழைப் பெண் ணுக்கு அமைந்த அழகு யாருக்கும் அமைந்ததில்லை.

மற்ற யூதர்களின் குடும்பங்களைப் போல் யோகோவாவின் குடும்பம் பெருமளவு செல்வத்தைத் திரட்டிய தில்லை. விலை குறைவான நவமணிகளை விற்கும் சிறிய கடை ஒன்றையே யோகோவா வைத்திருந்தார். அதில் மிஞ்சுவதையெல்லாம் தன் மகளுக்கு நகையாகச் செய்து போட்டுப் பார்த் தார்.

யூஜியானுவின் தாய் அவளுக்கு ஆறு வயது இருக்கும்போதே காலமாகிவிட் டாள். மகளைக் கருதி யோகோவா மறுமணம் செய்து கொள்ளவில்லை.

அழகான மகளைப் பெற்றுவிட்ட அவ ருக்கு அவளைக் காவல் காக்கும் வேலையே பெரிதாக இருந்தது.

அங்கேதான் அந்த இரவில் வந்து சேர்ந்தான் பாஸ்கர ரவிவர்மன். அவனைத்தான் எதிர்பார்த்துக் கொண் டிருந்தாள் யூஜியானு.

அந்த இரவில் அவன் தூரத்தில் வரும் போதே அவனை இனம் கண்டுகொண்ட யூஜியானு எழுந்து நின்று விளக்கைச் சிறிது தூண்டிவிட்டாள். எண்ணெயில் லாமல் எரியும் அவளது வதன விளக்கு அதைவிடப் பிரகாசமாக இருந்தது.

படிக்கட்டில் ஏறி முக்காட்டை நீக்கினான் ரவிவர்மன்.

புன்னகை செய்த அந்த வெண்ணிலவு, விளக்கைக் கொண்டு போய் ஒரு சலவைக் கல் பலகையின் மீது வைத் தது. பழைய ரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பட்ட இரண்டு நாற்காலிகள் அங்கு இருந்தன.

ரவிவர்மன் ஒன்றில் அமர்ந்தான். உள்ளே சென்ற யூஜியானு சில பழ வகைகளோடு திரும்பினாள்.



யூதர்களுக்கு மது அருந்தும் பழக்கம் இருந்தாலும், யோகோவா குடும்பத்தினருக்கு அது இருந்ததில்லை.

அதைவிடப் பாஸ்கர ரவிவர்மனுக்கு அந்தப் பழக்கம் அறவே இல்லை. அவனுக்குச் சில ஆசைகள் உண்டு. அந்த ஆசைகளில் எதிலே முறை தவறலாம், எதிலே தவறக் கூடாது என்பதும் அவனுக்குத் தெரியும். தாலி கட்டாமல் ஒரு பெண்ணை நெருங்குவது தர்மத்துக்கு விரோதம் என்பது அவன் சித்தாந்தம். ''அவள் விலைமகளாக இருந்தாலும், ஆடவனின் கடமை அதுதான்'' என்பான். ஆனால், தனது எதிரிகளை மட்டும் அழ வைத்து விடுவான். காரணம் கேட்டால், 'நம்மைப் பிறர் அழ வைக்கும் முன்னாலே அவர்களை அழ வைத்துவிட வேண்டும்' என்பான்.

அதனால் அவன் ஒரு கொடியவன் என்றே இரண்டாம் சேரமான் பெருமாள் நினைத்திருந்தார்.

'காலம் கருதிச் செய்யும் அதர்மமும், ராஜதந்திரத்துக்குத் தர்மமே' என்று எண்ணும் ரவிவர்மன், அரசியல் விஷயங்களில் பல கட்டங்களில் அதைக் கையாண்டிருக்கிறான். அதைத் தவறு என்று இரண்டாம் சேரமான் கருதினார்.

'அதை மட்டும் நான் செய்யாமல் இருந்தால், அவரது மகுடமே என்றோ பறி போயிருக்கும்.' என்று பலரிடமும் கூறினான் ரவிவர்மன்.

மொத்தத்தில் அவன் ஒரு புரியாத புதிர். கொடுமையும், தர்மமும் சம அளவு கலந்த வடிவம். அந்தக் கொடுமைகளும் தர்மங்களே என்று அவன் கருதியதால் நாம் அதை விமர்சிப்பதில் பயனில்லை.

யூஜியானா அவனை மிகவும் விரும்பினாள். அவனும் அவளை மிகவும் நேசித்தான். இருவரும் அடிக்கடி தனியாகச் சந்திப்பதற்கு யோகோவா குறுக்கே நிற்கவில்லை. காரணம் பெண்களைப் பற்றிய ரவிவர்மனின் எண்ணம் அவருக்குத் தெரியும். காதலை வெறும் உடல் வெறியாக அவன் கருதியிருந்தால், அவன் படுக்கை முழுதும் அழகிய கிளிகள் நிரம்பிக் கிடக்கும். அவ்வளவு வசதி படைத்தவன் அவன் என்பதை யோகோவா அறிவார். காதலர்கள் ஒருவருக்கு ஒருவர் அறிமுகமாகிக் கொண்டது, காலத்தின் கட்டளையே என்று யோகோவா பேசாமல் இருந்து விட்டார்.

யூஜியானாவும், பாஸ்கர ரவிவர்மனும் எப்போது சந்தித்தார்கள்? அது ஒரு வேடிக்கையான கதை.

மூன்று வருடங்களுக்கு முன்பு இரண்டாம் ராஜசிம்ம பாண்டியனுக்கும் சேரமன்னனுக்கும் போர் ஏற்பட்டது. அந்தப் போரில் சேரமான் பெருமாளின் சேனைக்குத் தலைமை வகித்து வழி நடத்தியவன் பாஸ்கர ரவிவர்மன். ராஜசிம்ம பாண்டியன் தன் தந்தை பராந்தகனைப் போல் அவ்வளவு வல்லமை உடையவன் அல்ல. ஆகவே அந்தப் போரில் வெற்றி பெறுவது பாஸ்கர ரவிவர்மனுக்குக் கடினமாக இல்லை.

எந்த வெற்றிக்கும் தலைவர்கள் மட்டுமே காரணமல்ல; படைகள்தாம் பெரும் காரணம். ஆயினும் விழாக் கொண்டாடுவது தலைவனுக்கு மட்டும் தானே!

அப்படி ஒரு விழாவை அவனுக்கு ஏற்பாடு செய்திருந்தான் இரண்டாம் சேரமான் பெருமாளின் மகன் மார்த்தாண்டவர்மன்.

அவன் ஏற்பாடு செய்தான் என்பதைவிட, ரவிவர்மன் சொல்லி அவன் செய்தான் என்பது பொருந்தும். நேரம் பார்த்து விளம்பரம் தேடிக் கொள்வதிலும் ரவிவர்மன் சாமர்த்தியசாலி.

விழாவுக்கு முதல் நாள் கொடுங்கோளூர் பகவதி அம்மனுக்குச் சாத்துவதற்காகவும், தன் மனைவி பத்மாவதிக்கும், தன் சகோதரிகள் மூத்த தாவளி, இளைய தாவளி, மூரின்னூர்த் தாவளி, சாலியூர்த் தாவளி, பள்ளிவிருத்தித் தாவளி ஆகியோருக்கும் நகைகள் வாங்குவதற்காகவும் தானே வாணிபச் சந்தைக்கு வந்தான் ரவிவர்மன்.

ஆட்களை அனுப்பியே அவற்றை வாங்கிவிடலாம் என்றாலும் வெற்றி பெற்ற தளபதி என்று பத்துப் பேர் தம்மைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையோடு அவனே வந்தான்.

ஒவ்வொரு கடையிலும் நவமணி நகைகளை வாங்கி முடித்த பிற்பாடு, பகவதி அம்மன் கோயில் கதவுக்குச் சில கற்கள் வாங்க யோகோவாவின் கடைக்கும் வந்தான். அந்தக் கடையைப் பார்த்ததும், 'இங்கே நாம் வாங்க என்ன இருக்கிறது?' என்றுதான் அவன் கருதினான். ஆனால் இருந்தது. அங்கிருந்து அவனை நகர விடாமல் செய்த பதுமை ஒன்று.

மொத்த வியாபாரி ஒருவரைச் சந்திக்க யோகோவா அராபித் தெருவுக்குப் போயிருந்த காரணத்தால், யூஜியானாவே அப்போது கடையில் இருந்தாள்.

சில பெண்களைப் பார்த்தவுடனேயே மனம் என்னவோ ஆகிவிடுகிறது. ஆயிரக்கணக்கான பெண்களைத் தினமும் காணும் கண்கள் எங்கோ ஓர் அற்புத சக்தியில் லயித்து விடுகின்றன. காரணம், சேரமான் பெரு

மானைக் கவர்ந்த ஸ்ரீரங்கநாதருக்குத் தான் தெரியும் !

ரவிவர்மன் கண் வழி நுழைந்த அந்தக் கட்டழகு, அவனைப் பேதலிக்கச் செய்துவிட்டது.

தூசு படிந்து கிடந்த சீனத்துப் பாத்திரங்களை ஒவ்வொன்றாக எடுத்துத் துடைத்து அவன் முன்னே வைத்தாள் யூஜியானா. அவற்றிலே பல வகையான கற்கள் இருந்தன. நீண்ட நாட்களாக விலை போகாமல் கிடந்த அந்தக் கற்களுக்கு அன்று யோகம் அடித்தது !

அத்தனை கற்களையும் மொத்தமாக வாங்கிக் கொள்ள அவன் தயார் ; விற்பவளும் சேர்த்துக் கிடைத்தால், என்ன விலைகொடுக்கவும் அவன் தயார்!

ரவிவர்மனும் சாதாரணமானவன் அல்ல; நன்கு உயர்ந்த தோற்றம். அகன்ற தோள்கள். பரந்த நெற்றி. எடுப்பான மார்பு. ஆட்கொல்லிக் கண்கள். சிரிப்பிலேயே அவன் பத்து வகைச் சிரிப்பு வைத்திருந்தான். அவற்றில் இரண்டு வகையை அழகுக்காக ஒதுக்கி யிருந்தான். ஒன்று கவருவது: இன்னொன்று நம்ப வைப்பது. கழுத்தறுக்கும் சிரிப்பை அரசியலுக்கு மட்டும் அர்ப்பணித்து விட்டான். அவனிடம் மயங்கிய எந்தப் பெண்ணையும் அவன் தொட்டதில்லை; அதுதான் விசேஷம். பலரைப் பைத்தியமாக்குவதிலே அவனுக்குத் தனி இன்பம். ஆனால் இங்கே நிலைமை வேறாகிவிட்டது. அவனே பைத்தியமாகும் நிலையில் இருந்தான்.

இருந்த மயக்கத்தில் உடைந்துபோன கற்களைக்கூட ஒன்று விடாமல் வாங்கிக் கொண்டான். அங்கே அழகுக் கலை சாதாரணப் பொருள்களுக்கு அதிக விலையைப் பெற்றுக் கொண்டது.

தோள் கண்டான் தோளே கண்டான் ; தொடர்ந்து வேறு கடைக்குச் செல்ல மனமில்லை.

''இவ்வளவு மதிப்பு மிக்க மணிகள் எப்படி இவ்வளவு காலம் விற்காமல் இருந்தன !'' என்று கேட்டான்.

''மணிகளுக்கும் காலம் நேரம் உண்டு '' என்றாள் யூஜியானா. அடக்கத்தோடு.

ரவிவர்மனைப் பார்க்க ஒரு பெரும் கூட்டமே அங்கே திரண்டு நின்றது. இரண்டு பேருமே அதை மறந்து போய் விட்டார்கள்.

''ஜனங்களுக்கு எதைத் தேர்ந்தெடுப்பது என்ற அறிவே வரவில்லை!'' என்றான் ரவிவர்மன்.

கூடி இருந்த கூட்டத்தில் பத்துப் பேர், ''உண்மை! உண்மை!'' என்றார்கள். சொல்பவன் தலைவன் அல்லவா?

''அறிவு கண்ணிலே மட்டும் இல்லை'' என்றாள் யூஜியானா.

''எனது கண்கள் எனது மூளையை ஏமாற்றியதில்லை!'' என்றான் ரவிவர்மன்.

'' எடுத்துக் கொண்ட எல்லாப் பொருள்களையும் சரியாகப் பார்த்தீர்களா ?''

''இல்லை.''

''பின்பு?''

'' நான் நட்சத்திரங்களை வாங்குகிறேன் ; நிலவைப் பார்க்க விரும்புகிறேன் !''

'' நிலவு ஒருநாள் மறைந்து விடுமே !.....''

''அப்போது நானே வானமாகி விடுவேன் !''

'' நீங்கள் நன்றாகப் பேசுகிறீர்கள்.''

''அதை நம்பித்தானே நான் எல்லாவற்றையும் நடத்திக் கொண்டிருக்கிறேன்.....!''

''எல்லாவற்றையும் என்றால்....?''

''சந்தையிலே இரகசியம் பேசக் கூடாது !''

யூஜியானா சிரித்தாள். அந்தச் சிரிப்பு அவனது இதயத்தைப் புஷ்பங்களாலே வருடுவது போல் இருந்தது!

''நாளை விதான மண்டபத்தில் எனக்கொரு விழா இருக்கிறது.''

வெட்கத்தைவிட்டு அவனே அழைப்பு விடத் தொடங்கினான்.

அழகின் சந்நிதியில்தானே என்ன பேசுகிறோம் என்று தெரியாமல் மனிதர்கள் பேசுகிறார்கள் ! எவ்வளவு நேரம் பேசுகிறோம் என்று தெரியாமல் பேசுவதும் அங்கேதானே ! பேச்சு முடிந்து விடக் கூடாது என்று கவலைப் படுவதும் அதில்தானே !

'விழாவைப் பற்றி நம்மிடம் ஏன் சொல்ல வேண்டும் ? நாம் என்ன மதிக்கத்தக்க அரண்மனை ஊழியரின் மகளா ?' என்ற ஐயமும் அச்சமும் ஒருகணம் யூஜியானாவுக்கு ஏற்பட்டது. ஆயினும் அவன் தன்னை அழைக்கத் தொடங்குவதில் ஒரு நியாயம் இருப்பது போலவும் ஒரு பிரமை ஏற்பட்டது.

''எனது தேரை அனுப்பினால் நீங்களும், உங்கள் பெற்றோரும் வரமுடியுமா?'' என்று கேட்டான் ரவிவர்மன்.

இந்தக் கேள்வியைக் கேட்டுக் கூட்டமே திகைத்தது.

யூஜியானாவுக்கு உச்சி முதல் உள்ளங்கால் வரை புல்லரித்தது. தலை குனிந்து ''எனக்குத் தாய் இல்லை!'' என்றாள்.

'' தந்தையுடனாவது..... '' என்று இழுத்தான் ரவிவர்மன்.

கால் பெருவிரலால் நிலம் கீறியபடி குனிந்த தலையை மெதுவாக அசைத்தது அந்த வெள்ளை மான் குட்டி.

''மெத்த மகிழ்ச்சி'' என்று சொன்ன ரவிவர்மன், அவள் மனத்திலேயே நிற்கும்படி ஒரு புன்னகையைச் சிந்தி விட்டுப் புறப்பட்டான்.

உடனே கூட்டத்தில் இருந்த பூகப் பெண்கள் எல்லாம் ஓடிப் போய் யூஜியானாவைக் கட்டிப் பிடித்து முத்தம் கொடுத்து, ''தளபதி உன்னோடு இவ்வளவு நேரம் பேசினாரே.....'' என்று ஆச்சரியப்பட்டார்கள்.

மறு நாள் யூஜியானாவின் வீட்டு வாசலில் ரதம் வந்து நின்ற போது, யோசோவாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. நடந்ததை விவரித்தாள் யூஜியானா.

வறுமைக்குத் திடீரென்று பெருமை கிடைத்தால் விளைவைக் கருதாமல் மகிழ்ச்சி கொண்டாடும். யோசோவா அந்தக் கணத்தில் அப்படித்தான் இருந்தார்.

''அதிகம் அலங்காரம் செய்து கொள்ள வேண்டாம்'' என்று மட்டும் மகளைக் கேட்டுக் கொண்டார்.

மறுகணமே, ''பரவாயில்லை; நன்றாகவே அலங்காரம் செய்து கொள்'' என்றார்.

விழா மண்டபத்தில் கதாநாயகனாக நின்றான் ரவிவர்மன்.

நிறந்தமேனியும், நெற்றியில் விபூதிப் பூச்சும், கழுத்திலே தங்கம் பதித்த ருத்திராட்சமும், இடையில் மஞ்சள் ஜரிகை ஆடையுமாக இரண்டாம் சேரமான் பெருமாள் உள்ளே நுழைந்தார். அவரது அமைச்சர்களும், சேனை வீரர்களும் அதே கோலத்தில் அவருடன் வந்தார்கள்.

அவரது காலில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தான் ரவிவர்மன்.

''இதே வீரத்தை ஸ்ரீரங்கன் உனக்கு அருளுவானாக. அதோடு என்றைக்கும் இருக்கும்படி நல்ல உள்ளத்தையும் வைத்திருப்பானாக. விலைமதிக்க முடியாத மாணிக்கப் பதக்கங்களை அணிந்த வேங்கடபதி, விரும்பினால் அவற்றை விற்றுவிடலாம். அதை அவர் விற்காததற்குக் காரணம், அது 'பிறர் சொத்து' என்பதால்தான். தன்னிடம் உள்ள பிறரது சொத்தையே அவர்களுக்காகப் பாதுகாக்கிறான் தலைவன். பிறர் சொத்துக்களில் ஆசை வைக்காதே என்பது அதன் பொருள். யாருடைய வாழ்க்கைக்கும் குறுக்கே நிற்காதவனுக்கே நல்ல வாழ்க்கையை ஸ்ரீரங்கன் அருளுகிறான். பாஸ்கரா, வர்மாக்கள் வம்சம் வன்மமில்லாத வம்சம். அதிலும் நம்முடைய தலைமுறை வஞ்சமில்லாத தலைமுறை. நாம் நடத்தும் போர்கள்கூட இறைவனின் கட்டளையே. அதனால்தான் வெற்றி பெறுகிறோம். இது உன்னுடைய வெற்றியல்ல; இறைவனின் வெற்றி. வெற்றியில் ஆணவம் கொண்டவன், தோல்வியை அருகே அழைக்கிறான். இந்த விழா உனக்கு ஆணவத்தைக் கொடுக்காமல் இருக்க ஸ்ரீரங்கனை வேண்டுகிறேன்'' என்றார் சேரமான் பெருமாள்.

மீண்டும் ஒரு முறை அவரது கால்களில்விழுந்து வணங்கினான் ரவிவர்மன்.

உடனே அவனது கால்களில் விழுந்து வணங்கினான் மார்த்தாண்ட வர்மன்.

அவனது கைகள் மார்த்தாண்ட வர்மனைத் தாங்கி எடுத்தபோது, இரண்டு பூப்போன்ற கரங்கள், தன் பாதத்தைத் தொடுவதை உணர்ந்தான். எதிரே மூடிய கரங்களோடு நிமிர்ந்து நின்றாள் யூஜியானா.

சற்றுத் தொலைவில் ஓர் ஆசனத்தில் அமர்ந்துவிட்டார் சேரமான்பெருமாள்.

மூடிய கரங்களை அவனுக்கு நேரே நீட்டி, தலை குனிந்தபடி திறந்தாள் அவள். உள்ளே பட்டுத் துணி முடிப்பு ஒன்று இருந்தது. ரவிவர்மன் அதைக் கையில் எடுத்தான்; பிரித்தான்...... உள்ளே ஒரு முல்லைப் பூவும், ஒரு கள்ளிப் பூவும், ஒரு மாணிக்கக் கல்லும், ஒரு வெறும் வெள்ளைக் கல்லும் இருந்தன. தனது தாழ் நிலையை அவள் அதன் மூலம் குறித்தாள்.

அதைப் புரிந்துகொள்ள ரவிவர்மனுக்கு வெகு நேரமாகவில்லை.

மண்டபம் கலைந்தபோது அவர்களும் பிரிந்தார்கள். அவர்களது கால்களோ நடந்தன; கண்களோ பார்த்தன.

ஆளில்லா மண்டபத்தில் மன்மதன் தூவிய மலர்கள் சில விரவிக் கிடந்தன. இலக்கியம் அங்கே கடவுள் வாழ்த்துப் பாடி வைத்தது. அன்று முதல் அவன் அவளானான்; அவள் அவனானாள்.

பகலிலும் பள்ளி கொள்ளத் தொடங்கிய மகளை, தந்தை வியப்போடு பார்த்தார்.

பாஸ்கரன் மனைவி பத்மாவதி அவனது காதல் உணர்வை அறியவில்லை.

முனிவனோடு உடலுறவு கொள்ளாததால், அவனது உடலுறவு எப்படி இருக்கும் என்று அறியாமல், முனிவனாகத் தோன்றிய இந்திரனுக்கு இணங்கிவிட்டாள் அல்லவா, அகலிகை ?

தன்னை பாஸ்கரன் காதலித்தே பத்மாவதி அறியாதவளாதலின், அவனது விரக தாபத்தையும் அவளால் உணர முடிய

# நாள்தோறும் உங்கள் உடலுக்கு வேண்டிய 23 அத்தியாவசிய 'ஊட்டச்' சத்துக்கள்.

## காம்ப்ளான் இப்போது 3 இன்சுவைகளில் கிடைக்கிறது.













நினைவிருக்கட்டும்:
**பாலையும்விட அதிக போஷாக்கைத் தருகிறது காம்ப்ளான்.**



பருகுவீர்
**காம்ப்ளான்**
பரிபூரண திட்டமிட்ட உணவு

உலகெங்கும் உபயோகிக்கப் படுவது—
**க்ளாக்ஸோ**
ஆராய்ச்சியில் உருவானது.

CHGC.9.233 TM

வில்லை. பாவம் விரகதாபம் என்பது அவள் மட்டுமே அறிந்த ஒன்று.

நாட்கள் நடந்தன.

யூஜியானுவை இரவு வேளையில் சந்திப்பதே தன் கடமைகளில் ஒன்றாகக் கருதினான் ரவிவர்மன்.

அன்றும் அது போலவேதான் வந்திருந்தான்.

இரண்டு மூன்றாண்டு காலம் உடல் ஸ்பரிசமே இல்லாததால், அவர்களது இதய தீபம் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. பழங்கள் அப்படியே இருந்தன.

நள்ளிரவில் வந்த யோகோவா அவர்களுக்குப் பழக்கமான இந்தச் சிவராத்திரியைப் பார்த்தபடி உள்ளே போய் விட்டார்.

''ஒரு நாள்கூட நீங்கள் இரவில் தூங்கி நான் பார்த்ததில்லை. இன்றாவது....'' என்று கேட்டாள் யூஜியானு.

அவளையும் மீறி ஓர் ஆசை துளிர்த்தது. மெதுவாக எழுந்து உள்ளே சென்றாள். மிகுந்த உற்சாகத்தோடு கட்டிலின் மீது புதிய கம்பளம் ஒன்றை விரித்தாள், யூஜியானு.

யோகோவா வேறு அறையில் தூங்கி விட்டார்.

அந்தக் கம்பளத்தின் மீது படுத்தான் ரவிவர்மன். அவள் மெல்லிய குரலில் பாடத் தொடங்கினாள்.

'எத்தனை இரவுகள் தூங்காமல் இருப்பினும் சரியே, தூங்குவதானால் நாம் இருவருமே ஒரே நேரத்தில் தூங்க வேண்டும்' என்பதே பாடலின் சாரம்.

அவள் தெரிந்து பாடினாளோ, தெரியாமல் பாடினாளோ, அவள் விரித்திருந்த அந்த ரத்தினக் கம்பளம் தாம் இறந்த பிறகு தம் மீது போர்த்துவதற்காக யோகோவா வாங்கி வைத்திருந்தது. (தொடரும்)

# ராஜாஜியின் பாராட்டு

[1937 ஜூன் மாதம் 22ந் தேதி பம்பாயில் ''லோகமான்ய'' என்ற பிரசித்தி பெற்ற மராத்திப் பத்திரிகையின் ஆசிரியர் ராஜாஜிக்கு ஒரு கடிதம் எழுதினார்:

''வீர சாவர்க்கர் வெகு ஆண்டுகள் கடும் சிறைவாசம் அநுபவித்துவிட்டு, விடுதலையாகி 27ந் தேதி பம்பாய்க்கு முதல் தடவையாக வருகிறார். அவருக்குப் பொது மக்கள் வீர வரவேற்பு நல்க இருக்கிறார்கள். அந்தச் சமயத்தில் வெளியாகும் எங்கள் விசேஷ இதழுக்கு அவரைப்பற்றி உங்கள் கருத்துக்களைத் தெரிவித்தால் மிக நன்றியுள்ளவனாக இருப்பேன். 25ந் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்குமாறு தந்தி கொடுக்கவும்.'' – இதற்கு ராஜாஜி வீர சாவர்க்கரைப் பற்றி எழுதியனுப்பிய தந்தி மெய் சிலிர்க்க வைப்பதாக இருக்கிறது.

ஆசிரியர்]

விநாயக் தாமோதர் ஸாவர்க்கர் விடுதலை செய்யப்பட்டார் என்பதும் தேசம் முழுவதும் சுற்றி வருவதற்கும் அனுமதிக்கப்பட்டிருக்கிறார் என்பதும் பேருவகைக்குரிய விஷயங்களாகும். அவருடைய வாழ்க்கையில் விறுவிறுப்புடன் வேலை செய்யக்கூடிய பருவம் முழுவதும் மனித வாசனையேயற்று தனிமையில் கிடந்து உழல வேண்டியதாயிற்று. நான் இன்றைய சாவர்க்கரை அறியேன். எதற்கு நான் அறிய வேண்டும்?

முப்பதாண்டுகளுக்கு முன் அவர், வீரத்தின், துணிச்சலின், குறைவற்ற தாய்நாட்டுப் பற்றின் உருவமாக என் மனத்தில் நின்றார். அந்தச் சித்திரமாகவே என்றென்றும் அவர் விளங்குவார். அவர் இன்று என்ன நினைத்தாலும் செய்தாலும் அந்தப் பழைய நினைவுகள், அப்போது ஏற்பட்ட எண்ணங்கள், அவருடைய வேலை, இயக்கம், அந்த நாளில் அவர் புரிந்த சாகசச் செயல்கள் ஆகியவற்றை என் மனத்திலிருந்து என்றும் அழிக்க முடியாது. அவர் எனக்குப் பழைய தேச பக்த வீரர். சுதந்திரத்துக்குப் போராடிய ஒளிமிக்க வீரர். அவரை நினைக்கும்போதெல்லாம், கப்பலின் குளியலறையிலிருந்த சிறு ஜன்னல் வழியாக அவர் வெளியில் கடலில் குதித்ததும், பிரஞ்சு நாட்டு மண்ணில் அவரைத் துரத்திப் பிடித்து, உலக சட்ட நீதி சம்பிரதாயத்துக்கு முற்றும் முரணாக அவரை பிரிட்டிஷ் போலீஸார் வசம்



ஸாவர்க்கர்

ஒப்படைத்து மீண்டும் சிறைப்படுத்தப்பட்டதும் தாம் என் முன் நிற்கின்றனவே தவிர அவர் சமீபத்தில் பேசிய பேச்சுக்களோ, கருத்துக்களோ அல்ல. ஸாவர்க்கர் அனுபவித்த இன்னல்களை, அனுபவித்தவர்களே ஸாவர்க்கரை எடை போட முடியும். பாரத நாட்டின் சுதந்திர உணர்ச்சியைத் தட்டி எழுப்பியவர்களில் மிகப் பெரிய அளவு பணிபுரிந்தவர் ஸாவர்க்கர்.

# தாமரை இலையில் விழும் மழைத் துளிகள்!



புராதனமான நமது வாத்தியங்கள் ஒவ்வொன்றுக்கும் ஓர் அதிதேவதை குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வகையில் நந்திகேசுவரர் மிருதங்கத்தின் அதிதேவதையாக விளங்குகிறார். நடராஜ மூர்த்தியின் ஆனந்த தாண்டவத்துக்கு நந்தி பகவான் மிருதங்கம் வாசித்ததாகப் புராண வாயிலாக அறிகிறோம். மேலும் மகாவிஷ்ணு பிரதோஷ காலத்தில் சிவபெருமானுடைய நர்த்தனத்துக்கு மிருதங்கம் வாசித்ததாகவும் வியாஸ பகவானுடைய குமாரர் சுகர் பாகவதக் கருத்தை விவரிக்கும்போது இந்திரன் மிருதங்கம் வாசித்ததாகவும் அறிகிறோம். மழைத் துளிகள் தாமரை இலைகளில் விழும்போது ஏற்பட்ட சப்த ஜாலங்களைக் கேட்டு மகிழ்ந்து சுவாதி என்ற மகரிஷி இந்த வாத்தியத்தை சிருஷ்டி செய்தார் என்று சாஸ்திரங்கள் மொழிகின்றன.

புஷ்கரம், மத்தளம், முரஜ, தண்ணுமை என்னும் வேறு சில பெயர்களும் மிருதங்கத்துக்கு உண்டு. ஆனால் மிருதங்கம் என்ற பெயர்தான் ஆதிகாலம் முதல் பிரசித்தமாக இருக்கிறது. இப்பெயர் வருவதற்கு இரு காரணங்கள் இருப்பதாகத் தெரிகிறது. ம்ருத் என்றால் வடமொழியில் மண் என்று அர்த்தம். முன்னாளில் மிருதங்கத்தின் உடல் மண்ணால் செய்யப்பட்டதால் அப்பெயர் பெற்றிருக்கலாம். மற்றொரு விளக்கம்: மிருதங்கத்தின் சிறிது குறுகலான அளவுள்ள வாய்ப் பாகத்தின் மேலுள்ள வலந்தலையின் நடு தோலில் கறுப்பாக இருக்கும் சோறு அல்லது கரணை. பழைய நாட்களில் ஆற்றங்கரை ஓரமாக உள்ள வண்டல் மண்ணை (ம்ருத்) பசையோடு குழைத்துத் தடவியதால் உண்டானது. ஆக இந்த வாத்தியத்தின் முக்கிய அங்கம் ம்ருத்–அங்கம் என்ற காரணத்தினால் மிருதங்கம் எனப் பெயர் பெற்றதாக அறிகிறோம்.

ஆனால் தற்சமயம் மிருதங்கம் மரத்தினால் செய்யப்படுகிறது. நமது சாஸ்திரங்கள் இன்னின்ன மரங்கள்தான் உத்தமம் எனக் கூறுகின்றன. பலா மரம், சந்தன மரம், கருங்காலியில் சில வகைகள், செம்மரம் அல்லது ரக்த சந்தனம், வேம்பு, மற்றும் சில மரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால் பெரும்பாலும் பலா மரம்தான் புழக்கத்தில் இருக்கிறது. மிருதங்கத்தின் அளவுகளுக்கு இம்மரம் அதிகமாகக் கிடைப்பதாலும், சீதோஷ்ண ஸ்திதிகளுக்கு அனுசரணையாக இருப்பதாலும், அதிகமாக உபயோகப்படுகிறது. நல்ல முற்றிய மரம்தான் மிருதங்கம் செய்வதற்கு ஏற்றது. ஒரு கட்டையை எடுத்துக் கடைந்து, குடைந்து, மிருதங்கம் உருவாக்கப்படுகிறது. மிருதங்கத்தின் கூடாக இருக்கும் உட்புறமே இதன் ஒலியைப் பெருக்கும் சாதனம் (Resonating Column).



உமையாள்புரம் கா. சிவராமன்

மிருதங்கத்துக்கு உபயோகப்படும் தோல்கள் எல்லாம் பதப்படுத்தப்படாதவை **Untanned**, என்பது மிக முக்கியமான விஷயம். என்னுடைய சொந்த அனுபவத்தில் பதப்படுத்தப்பட்ட தோல்களை உபயோகிக்கும் போது எதிர்பார்க்கும் நல்ல நாதம் கிடைப்பதில்லை. ஆரோக்கியமும் சக்தியும் வாய்ந்த மிருகங்களின் தோல்களே பயன்படுகின்றன. சிறிது குறுகிய விட்டமுள்ள வாய்ப் பக்கத்தில் உபயோகப்படும் தோல்கள் மூன்று. அவை யாவன: (முறையே, வெளிப் பக்கத்திலிருந்து) - பசுந் தோல், ஆட்டுத் தோல், பசுந்தோல் அல்லது சற்றுக் கனமான ஆட்டுத் தோல். இந்த மூன்று தோல்களையும் ஜலத்தில் நனைத்துவிட்டு இப்பாகத்தின் மேல் வைத்துக் கயிறு போல் இருக்கும் எருமைத் தோலினால் (இதற்குப் பெயர் வார்) இழுத்து, கூடியவரையில் இப்பாகத்தின் எல்லா இடங்களிலும் இறுகும் பிடியானது (tension) சமமாக ஆகிய பிறகு இந்த மூன்று தோல்களையும் சன்னமான பசுந் தோலினால் பின்னுவார்கள். இதற்கு 'கவணை' என்று பெயர். இந்தப் பாகத்துக்கு ஒட்டுமொத்தமான பெயர் 'வலந்தலை'. வலந்தலையில் வெளிப்புறத்தில் காணும் தோலுக்குப் பெயர் வெட்டுத் தட்டு. இது பசுந்தோல். இந்தத் தோலை நடுவில் சிறிது வெட்டி எடுத்து விடுவதால் வெட்டுத்தட்டு எனப் பெயர் வந்திருக்க

லாமோ என ஊகம். மத்தியில் காணும் தோலுக்குப் பெயர் கொட்டுத்தட்டு. இது ஆட்டுத் தோல். அதிகமான சொற்கட்டுகள் இந்த இடத்தில் வாசிப்பதனால் கொட்டுத் தட்டு எனப் பெயர் வந்ததோ என நினைக்கிறேன். இந்த இரண்டு தோல்களுக்கும் உள்ளே இருக்கும் தோலுக்குப் பெயர் உக் கரைத் தட்டு (உள் கரைத் தட்டு). முதலில் கூறிய இரு தோல்களுக்கும் பாதுகாப்பாக இது இருப்பதால் இப்பெயர் ஏற்பட்டது என எண்ணுகிறேன்.

சிறிது அதிக விட்டமுள்ள வாய்ப்பக்கத்தில் உபயோகப்படும் தோல்கள் முறையே வெளிப் பக்கத்திலிருந்து 1. எருமைத் தோல் 2. ஆட்டுத்தோல். முன்பு கூறியது போல் ஜலத்தில் சிறிது ஊறவைத்த எருமைத் தோல்களை இப்பாகத்தில் வைத்து வாரினால் கொஞ்சம் இழுத்த பின் இதைச் சுற்றிலும் கவனை பின்ன வேண்டும். இந்தச் சாதனத்துக்குப் பெயர் இடந்தலை அல்லது தொப்பி. இரு சாதனங்களும் நன்றாகக் காய்ந்த பிறகு வாரினால் நன்றாக இழுத்துக் கட்டுவார்கள். வலந்தலைக்கும் இடந்தலைக்கும் உண்டான வேறுபாடு என்னவென்றால் வலந்தலையில் உள்ள தோல்கள் அனைத்தும் ஒரே அங்கமாகப் பிணைக்கப்பட்டுள்ளன. (Unit) இடந்தலையில் அப்படியில்லை. ஆட்டுத் தோல் தனிப்பட்ட முறையில் இடந்தலை மூட்டில் உடபுறமாகக் கட்டப்பட்டிருக்கிறது. இடந்தலையில் உள்ள ஆட்டுத் தோலைத் தனியாகப் பிரித்து எடுக்கலாம். நாதம் சரியாக இல்லாவிடில் வேறு தோல் மாற்றலாம். வலந்தலையில் அப்படியல்ல. மாற்ற வேண்டுமானால் எல்லாவற்றையும் புதிதாக மாற்ற வேண்டும்.

வலந்தலையின் மத்தியில் உள்ள தோலில் கருப்பு மாவுப் பசை தடவப் படுகிறது. இரும்பு, மாங்கனீஸ் தாதுப் பொருள்கள் விசேஷமாக 'அடங்கியுள்ள கிட்டான் என்று சொல்லக் கூடிய கல்லிலிருந்து இந்தப் பொடி தயார் செய்யப்படுகிறது. இந்தக் கருப்பு மாவுப் பசைக்கு உண்டான சில பெயர்கள்: சாதம். சோறு, கரணை, மருந்து. கருப்புப் பொடியைச் சமைத்த சாதத்துடன் சிறிது ஜலம் சேர்த்து நன்றாகப் பிசைந்து, சின்னச் சின்ன உருண்டைகளாக எடுத்து நடுத் தோலின் மத்தியில் சமமாகத் தடவிப் பிரத்தியேகமான கருப்புக் கல்லினால் நன்றாகத் தேய்க்க வேண்டும். எந்தெந்த சுருதிக்கு மிருதங்கம் தேவையோ அதற்குத் தக்கவாறு அதன் கன பரிமாணம் இருக்கும். குறைந்த (தக்கு) சுருதியாக இருந்தால் அதன் அளவு சிறிது கூடுதலாக இருக்கும். அதிக (ஹெச்சு) சுருதியாக இருந்தால் இதன் அளவு கொஞ்சம் குறைவாக இருக்கும். விரும்பிய சுருதிக்குத் தக்கவாறு மிருதங்க வினைஞர்கள் தங்களுடைய அனுபவத்தால் இதைச் செய்து கொடுப்பார்கள். கடைசியில் மிருதங்கத்தின் வலந்தலையில் ஏற்படும் மீட்டு சாப்பு நாதத்தைச் சரி செய்து கொடுப்பார்கள். வலந்தலையிலிருந்து ஏற்படும் நாதங்கள் அனைவரையும் ரமிக்கச் செய்யும். கருப்பு மாவுப் பசை நிரந்தரம் அல்ல. நாதம் குறைந்தாலோ, அல்லது வாசிக்கும்போது உதிர்ந்து விட்டாலோ மறுபடியும் முன்பு கூறியதுபோல் புதிதாக இம்மாவுப் பசையைப் போடவேண்டும்.

இடந்தலையில் கச்சேரி ஆரம்பிக்கும் முன்பு ரவையைப் பிசைந்து மிருதுவான மாவாகச் செய்து தோலின் மத்தியில் ஒட்ட வேண்டும். இந்த ரவை வைத்தவுடன் சுகமான நாதம் ஏற்படுகிறது. அதோடு மிருதங்க வாத்தியத்தில் முக்கியமாகக் கருதப்படும் 'கும்காரம்' அல்லது 'குமுக்கி' (அமுக்கிக் கொடுக்க வேண்டியது) இந்த இடந்தலைப் பாகத்திலிருந்து தான் வெளிப்படுகிறது. வலந்தலை பாகத்தில் உள்ள ஆதார சுருதிக்கு மந்தர ஷட்ஜமாகவே அல்லது அதற்குப் பொருத்தமான சுருதியிலோ இந்த இடந்தலையின் நாதம் அமைப்பது உசிதம்.

மிருதங்கத்தின் ஒவ்வொரு பாகத்தையும் ஒரு தேவதையாகப் போற்றி வணங்குகிறோம். வலந்தலை – சூரியன்; இடந்தலை – சந்திரன், வார் – சக்தி, கருப்பு மாவு (மார்ச்சனை) – திருமால்.

சங்கீதத்தில் உள்ள ஸ்வரங்களின் சேர்க்கையால் எப்படிப் பல நூற்றுக்கணக்கான ராகங்கள் ஏற்படுகின்றனவோ அப்படி இந்த வலந்தலை, இடந்தலையின் சேர்க்கையால் பல நூற்றுக் கணக்கான சொற்கட்டுகள், அவைகளை அனுசரித்த மோகராக்கள், கோர்வைகள் உண்டாகின்றன. வலந்தலையில் ஏற்படும் முக்கியமான ஆதாரச் சொற்கள்: நம், திம், தி, கி, ட, சாப்பு, அரைச் சாப்பு. இடந்தலையில் உள்ள ஆதாரச் சொற்கள் த, தொம், கும்காரம். சங்கீதத்துக்கு கமகம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் கும்காரம் மிருதங்கத்துக்கு. இந்த முக்கியமான நாதங்களைத் தவிர மிருதங்கத்தில் பல அனுஸ்வரங்கள் ( Over tones ) இருப்பதால் இந்த வாத்தியத்துக்கு லய வாத்தியங்களில் சிகரமான ஸ்தானம் கிடைத்துள்ளது. விஞ்ஞான மேதை ஸர் ஸி.வி. ராமனும் மற்றும் சில விஞ்ஞானிகளும் மிருதங்கத்தில் பிறக்கும் அனுஸ்வரங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள்.

கச்சேரிகளில் மிருதங்க வித்வானின் பங்கு முக்கியமானது. முதலில் சங்கீதத்தை நன்றாகப் போஷிக்க வேண்டும். கிருதிகள், ஸ்வரங்கள், மற்றுமுள்ளவைகளுக்குத் தன்னுடைய பரிபூரண ஒத்துழைப்பைக் கொடுத்து உதவ வேண்டும். கச்சேரியை நல்ல முறையில் பரிமளிக்கச் செய்ய வேண்டும். கச்சேரியில் ஆங்காங்கு ஏற்படக் கூடிய இடைவெளிகளில் தகுந்த சொற்கட்டுக்களை இட்டு நிரப்பி வாசித்து ரஸிக மக்களின் கவனத்தைக் கவர வேண்டும். கச்சேரியில் தனக்காகக் கொடுக்கப்படும் தனி ஆவர்த்தனத்தின்போது மிகவும் ரம்யமாக எல்லோரும் ரஸிக்கக்கூடிய முறையில் பலவித நாத ஸ்வரூபங்களையும், லய வேலைப்பாடுகளையும் வாசித்துக் காண்பிக்க வேண்டும்.

நமது சாத்திரங்களில் நூற்றுக் கணக்கான தாளங்கள் கூறப்பட்டுள்ளன. தாளம் என்கிற பலமான அஸ்திவாரத்தின் மீது மிருதங்கமும் மற்ற லய வாத்தியங்களும் எழுப்பும் மாளிகை எழிலும் ஏற்றமும் மிக்கது; வனப்பும் வண்ணமும் கூடி வியப்பில் ஆழ்த்துவது.



# ஒரு பிடி அவல்!

வெம்பாஸீ

இது பெண்கள் ஆண்டல்லவா? ஆடவர்களின் வாழ்க்கைக்கும் நாட்டின் பொருளாதார சமூக வாழ்வுக்கும் தாங்கள் எவ்வளவு அத்தியாவசியமானவர்கள் என்பதை நிரூபிக்க ஐஸ்லாந்து தேச மாதர்கள் ஒரு காரியம் செய்தனர். வேலைக்குப் போகும் மாதர்கள், வீட்டிலேயே இருந்து வேலை செய்யும் மாதர்கள் அத்தனை பேரும் சேர்ந்து சமீபத்தில் ஒரு நாள் பரிபூரண வேலைநிறுத்தம் செய்தனர். கடைகள், பத்திரிகைக் காரியாலயங்கள், டெலிபோன் எக்ஸ்சேஞ்ச் ஆபீஸ்கள், கிண்டர் கார்ட்டன் பள்ளிக்கூடங்கள் எல்லாம் வெறிச்சோடிப் போயின. வீட்டிலிருந்த அடுப்புகளும் மூட்டப்படவில்லை. பல ஆடவர்கள் தங்கள் சாப்பாட்டைத் தாங்களே தயார் செய்து கொள்ள வேண்டியதாயிற்று!

• • •

பால் உணர்ச்சியைத் தூண்டும் திரைப் படங்கள் மூலம் சம்பாதிக்கும் லாபத்தில் ஐம்பது சத விகிதம் வரியாக அரசாங்கத்துக்குத் தந்துவிட வேண்டும். அதுமட்டுமல்ல; இத்தகைய திரைப்படங்களுடன் சம்பந்தப்பட்ட எழுத்தாளர்கள், பாடலாசிரியர்கள், நடிகர்கள், நடிகைகள் ஆகியவர்களுடைய சம்பாத்தியத்தின் மீதும் அமித லாப வரி விதிக்கப்படும்!

எங்கே? நம் நாட்டிலா? இல்லை. காமக் கேளிக்கைகளுக்குப் பேர் போன நாடான பிரான்ஸில்தான்!

• • •

காந்திஜியின் சுய சரிதை மட்டுமின்றி, எத்தனை வாழ்க்கை வரலாறுகள் வந்துவிட்டன. ஆயினும் அவர் வாழ்க்கையில் ஒரு முக்கியமான சம்பவம் குறிக்கப்படவில்லை என்று மரீஷஸ் நாட்டு உயர் அதிகாரி குறைப்படுகிறார்! வியப்பாயிருக்கிறதல்லவா?

காந்தியடிகள் தமது இளமையில் தென் ஆப்பிரிக்காவில் பாரிஸ்டர் தொழில் தொடங்கியதும், அங்கு ஒத்துழையாமை இயக்கம் நடத்தியதும் யாருக்கும் தெரியும். அப்போது, ஒவ்வொரு சமயம் தாய்நாட்டுக்கு வந்து போவார். அப்படி வந்தபோது ஒரு முறை அவர் கப்பல் பழுதாகி, பதினேழு நாட்கள் மரீஷஸ் தீவில் தங்க நேர்ந்தது. அந்தச் சமயத்தில் அவர் மரீஷஸ் தீவு முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்து அந்நாட்டு மக்களுக்குச் சுதந்திர வேட்கையை ஊட்டினார். அதுமட்டுமல்ல; தாம் மூட்டிவிட்டு வந்த அனல் அணைந்து போகாமல் பார்த்துக் கொள்ளுமாறும் அங்குள்ளவர்களுக்கும் எழுதினார். இப்படி அவர் விதைத்த சுதந்திர உணர்ச்சியின் காரணமாகவே மரீஷஸ் தீவு சுதந்திரம் பெற்றது. இந்திய வம்சாவளியினர் இன்று அங்கு பதவி வகித்து நாட்டை நிர்வகிக்கிறார்கள். இவ்விஷயத்தை மரீஷஸ் நாட்டு ரேடியோ — டி. வி. டைரக்டரான திரு பரமானந்த ராமலகன் சமீபத்தில் அகமதாபாத்தில் தெரிவித்தார்.

• • •

இது சங்கீத சீசன் அல்லவா? சமீபத்தில் பம்பாயில் நிகழ்ந்த சம்பவம் நினைவுக்கு வருகிறது.

ஒரு பிரபல ஹிந்துஸ்தானி சங்கீத வித்வான் பாடிக்கொண்டிருந்தார். இடையில் ரஸிகர்கள் சடசடவென்று கரகோஷம் செய்து பாராட்டினார்கள்.

உடனே சங்கீத வித்வான் தம் இருக்கையை விட்டு எழுந்து விட்டார். ''இனி பாட மாட்டேன்'' என்று சொல்லி விட்டார்.

வித்வானின் கோபத்துக்குக் காரணம், எந்த இடம் ரஸிக்க லாயக்கில்லையோ அந்த இடத்தை அவையோர் ரஸித்ததுதான்!

பம்பாய் கவர்னரே அந்த வித்வானைத் தொடர்ந்து பாடும்படி கேட்டும் பயனில்லை!

• • •

வீணை வித்வான் சிட்டிபாபு, அமெரிக்காவில் சுற்றுப் பிரயாணம் செய்தபோது, ஓர் ஊரில் மேனாட்டு சாஸ்திரீய சங்கீத நிபுணர்கள் சுமார் எழுபது பேர் கூடியிருந்த சபையில் வீணை வாசித்தார். அப்படி வாசிக்கும்போது இடையில் அவர் போட்ட ஒரு சங்கதியைக் குறிப்பிட்டு மேனாட்டு சங்கீத சாஸ்திர பரிபாஷை சொல்லைக் கூறி, இந்த இடம் அதுதானா என்று கேட்டாராம் ஒரு நிபுணர்.

வீணை சிட்டி பாபு, ''நீங்கள் சொல்லும் வார்த்தையை நான் இதற்கு முன் கேட்டதில்லை. அதனால் நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் என்று எனக்குத் தெரியவில்லை. வேண்டுமானால் அந்த இடத்தை மீண்டும் ஒரு முறை உங்களுக்கு வாசித்துக் காட்டுகிறேன். நீங்களே புரிந்து கொள்ளுங்கள்!'' என்றாராம்.

கச்சேரி முடிந்து எல்லோரும் கலையத் தொடங்கினர். வயதான ஒருவர், சிட்டிபாபு அவர்களிடம் வந்து, ''என் அன்புக்குரிய இளைஞனே! உன்னை நான் ரொம்பவும் பாராட்டுகிறேன் — உனக்குத் தெரியாத விஷயத்தைத் 'தெரியாது' என்று சொன்னாயே, அதற்கு! இப்படிச் சொல்லுபவர்கள் மிகக் குறைவு!'' என்று கூறி முதுகைத் தட்டிக் கொடுத்துவிட்டுப் போனார்.

• • •

புதிர்: ''உலகிலேயே மிக நீளமானது அது. அதே சமயம் மிகக் குறுகியதாகவும் உள்ளது. இதனை அனாவசியமாகப் பெரிதும் வீணடித்துவிட்டு, பின்னால் ரொம்பவும் வருத்தப்படுகிறோம். அந்தப் பொருள் என்ன?

விடை: காலம்.

இதைச் சொன்னவர்: வால்டேர் என்ற பிரெஞ்சு அறிஞர்.



# வில்லும் விரலும் வென்றன!

பூவராகன்

அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் அவர்கள் லால்குடி திரு ஜயராமன் வீட்டுக்கு ஒருமுறை விஜயம் செய்துவிட்டுப் புறப்படும் போது சொன்னார்:

''ஜெயராமா! உன்னை என்னால் மறக்க முடியாதுப்பா! உன் பெயரிலேயே நான் வணங்கும் ஜெயராமன், நீ வசிப்பதோ என் பெயரைக் கொண்ட ராமானுஜம் தெரு. உன் வீட்டின் இலக்கமும் கடைசி நட்சத்திரத்தின் எண்ணும் ஒன்று. மறக்கணும்னு நான் நினைச்சாலும் முடியுமா?'' என்றார்.

அந்த மேதை சொன்னது நூற்றுக்கு இருநூறு சதம் உண்மையாகி விட்டது. ராமானுஜ அய்யங்கார் மட்டுமின்றிக் கர்நாடக சங்கீதத்தில் ஈடுபாடு கொண்ட யாருமே மறக்க முடியாத அளவில் இன்று ஜெயராமன் தமது ஆற்றலால் புகழ் பெற்று விட்டார். வில்லும் விரலும் ரசிகர்களின் மனங்களை வென்று விட்டன.

தியாகையரின் பிரதம ஷிஷ்யர்களுள் ஒருவரான லால்குடி ராமையரிலிருந்து ஆரம்பித்து ஜெயராமனின் புதல்வன் ஜே. ராதா கிருஷ்ணன் வரை ஐந்து தலைமுறையும் சங்கீத வித்வான்கள். எனவே கர்நாடக இசையைக் குல தனமாகப் பெற்றவர் ஜெயராமன் எனலாம்.

இன்று ஜெயராமன் பெற்றிருக்கும் ஆற்றலுக்கும் அதன் விளைவான புகழுக்கும் அடிப்படைக்காரணம் இவரது தகப்பனார் லால்குடி கோபாலய்யர் தான். இவருக்கு இடையாற்று மங்கலத்தில் 1930-ம் ஆண்டில் மகனாகப் பிறக்கும் பாக்கியம் பெற்றார் ஜெயராமன். இளமையில் கல்வியுடன் கலைப்பயிற்சியும் அளித்தார் தந்தை. முதலில் வாய்ப்பாட்டிலும் பிறகு வயலினிலும் தேர்ச்சி பெற்றார். பன்னிரண்டாம் வயதிலேயே அரங்கேறும் தகுதி அடைந்தார். முதல் கச்சேரி லால்குடி ஆலயத்தில் ப்ரவ்ருத்த ஸ்ரீமதி சமேத சப்த ரிஷீச்வரர் சந்நிதியில். தகப்பனாருடன் சேர்ந்து இவர் அன்று வாசித்ததைக் கேட்டு இறைவனும் இறைவியும் அடைந்த திருப்தியை இன்று இவரது புகழும் பெருமையும் எடுத்துக் காட்டுகின்றன.

ஜெயராமனுக்கு இருபத்தெட்டாவது வயதில் சேலத்தில் திருமணம் நடந்தது. மனைவி பெயர் ராஜம். ஆசைக்கு ஒரு பெண் விஜய லக்ஷ்மி. சங்கீத ஆஸ்திக்கு ஒரு மகன் ராதா கிருஷ்ணன். பத்மா சேஷாத்திரி உயர்நிலைப் பள்ளியில் இறுதி ஆண்டு படிப்புக்கு இடையூறு இல்லாத வகையில் சில கச்சேரிகளில் தகப்பனாருடன் வாசித்து வருகிறான்.

ஜெயராமனின் வாசிப்பில் சிறப்புக்கள்: தனி வயலின் கச்சேரி செய்யும் போது தமக்கென தனிப் பாணி வகுத்துக் கொண்டவர். பக்க வாத்தியமாக வாசிக்கும் போது வித்வானின் பாணியை அப்படியே பின்பற்றி அனுசரணையாக இருப்பது. மேலும் இவர் ஒரு வாக்கேயக்காரராகவும் சிறப்புப் பெற்றுள்ளார். வர்ணம், கிருதி, தில்லானா ஆகிய வகைகளில் பலவற்றை இயற்றியுள்ளார். பல வித்வான்களும் நாட்டிய மணிகளும் விரும்பி இவற்றை ஏற்றுள்ளனர்.

வயலின் தவிர இவர் தினமும் பயில்வது: யோகாசனங்கள்.

பொழுதுபோக்கு: நண்பர்களிடம் புதிர் போடுவது!

பிடித்தவை: பித்ருபக்தி, சலியாஉழைப்பு, நல்ல நண்பர்கள், முருகபக்தி.

பிடிக்காதது: வீண்வம்பு!

(மேலட்டை: லால்குடி ஜெயராமனும் மகன் ராதாகிருஷ்ணனும். வண்ணப்படம், புகைப்படங்கள்: உதரா.)

1. ''ஓகோ! அப்படினா அர்த்தம்!'' ஜெயராமனும் தகப்பனாரும்.
2. ''அப்பாவா? காப்பி சாப்பிடறார். இதோ ஒரு நிமிஷம் இருங்கோ!'' மகள் விஜி. மனைவி ராஜத்துடன் ஜெயராமன்.



# பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

## குழந்தைகளின் ஈரல், குலைக் கட்டிகளுக்கு.

### எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | | தங்கும் இடம் |
|---|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை | 10-00 -- 11-00 | மணி அண்டு கோ., மெயின் ரோடு. |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை | 3-00 -- 6-00 | பாம்பே ஹால் லாட்ஜிங் ஹவுஸ், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை | 9-00 -- 10-00 | Dr. மகாதேவ அய்யர் வீடு. கீழ ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை | 3-00 -- 5-00 | ஷண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை | 10-00 -- 11-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ், பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை | 11-30 -- 12-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, சுந்தரடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை | 5-00 -- 6-30 | யூனிடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை | 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை | 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை | 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் ஸப்ளைஸ். |
| சேலம் | 16 | காலை | 9-11 | லக்ஷ்மி ராஜ்பவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை | 3 - 5 | |
| ,, செவ்வாய்பேட்டை | 16 | மாலை | 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை | 10-30 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை | 4-00 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை | 9-00 -- 10-30 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை | 4-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சிபுரம் | 19 | காலை | 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை | 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்ட்ஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை | 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு, திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை | 3-00 -- 5-00 | M/s. அல்லயன்ஸ் கம்பெனி, 156, ராமகிருஷ்ண மடம் ரோடு (மேற்கு மாட வீதி) மைலாப்பூர். |
| செங்கற்பட்டு | 21 | காலை | 10-00 - 11 00 | அம்பீஸ் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை | 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சிப் கோர்ட் எதிர்புறம்( |
| விழுப்புரம் | 21 | மாலை | 5-00 -- 6-00 | மீனாட்சி டுபாக்கோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை | 8-30 -- 10-00 | பாரத் லாட்ஜ். கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை | 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ணா மெடிகல் ஹால், சன்னதி தெரு. |
| கடலூர் N. T. | 22 | மாலை | 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேபியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை | 9-11 | ப்ளாக் 13, வைதீக சமாஜம், தீபசாலை. |
| ,, | 23 | மாலை | 4 - 6 | |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை | 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளைஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை | 11-00 -- 12-00 | வாஸவி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை | 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி. |
| பெங்களூர்-3 | 26 | காலை | 9-11 | 14, V. கிராஸ் ரோடு, மல்லேஸ்வரம். |
| ,, | | மாலை | 3 - 5 | |

குறிப்பு : பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 4 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை B-11, 1வது கிராஸ், தில்லை நகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை, கரூர் (போன் : 87)

திருச்சி ஜில்லா

# சிவகாமியின் சபதம்

நாற்பத்தாறாம் அத்தியாயம்

## பௌர்ணமி சந்திரன்

இந்த மண்ணுலகம் படைக்கப்பட்ட காலத்திலிருந்து மாதம் ஒரு தடவை பூரண சந்திரன் உதயமாகி நீல வானத்தில் ஜொலிக்கும் வைர நட்சத்திரங்களிடையே பவனி சென்று வருகிறது.

ஒவ்வொரு பௌர்ணமி யன்றும் வான வீதியில் பவனி வரும் பூரண சந்திரன் கடந்த ஒரு மாதத்துக்குள்ளேயே பூவுலகில் எத்தனையோ அதிசயமான மாறுதல்கள் நிகழ்ந்திருப்பதைப் பார்த்துக்கொண்டு வருகிறது.

எனவே, மண்ணுலகில் அடிக்கடி நிகழும் மாறுதல்கள் பூரண சந்திரனுக்கு அதிகமான ஆச்சரியத்தை அளிக்க முடியாதுதான்.

என்ற போதிலும், இன்றைக்குச் சுமார் ஆயிரத்து முந்நூற்றைந்து ஆண்டுகளுக்கு முன்னால் (கி.பி. 642-ல்) மார்கழி மாதத்தில் உதித்த பூரண சந்திரன் வாதாபி நகரம் இருந்த இடத்துக்கு மேலாக வந்தபோது சிறிதுநேரம் ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்து நின்றுவிட்டு ஒரு பெருமூச்சுடனேதான் அப்பால் நகர்ந்திருக்க வேண்டும்.

சென்ற பௌர்ணமியன்று அந்த வாதாபி நகரத்தின் மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் சந்திரனையே தொட்டுவிட முயல்வதைப் போல் கம்பீரமாக எழுந்து நின்றன. வானத்து நட்சத்திரங்களோடு போட்டி யிடுவன போல் நகரெங்கும் தீபங்கள் ஜொலித்தன. ஐசுவரியத்தில் பிறந்து ஐசுவரியத்தில் வளர்ந்த ஆடவரும் பெண்டிரும் சகலாபரண பூஷிதர்களாக அந்தப் பெருநகரின் விசாலமான வீதிகளில் மதோன்மத்தம் கொண்டு உலாவினார்கள். அலங்கரித்த யானைகளும், அழகிய குதிரைகளும் தந்தச் சிவிகைகளும், தங்க ரதங்களும் மோகன வெண்ணிலவிலே ஒளி வீசித் திகழ்ந்தன. விண்ணை எட்டும் மாளிகைகளின் உப்பரிகைகளில் வெண்ணிலாவுக்கு இன்னும் வெண்மையை அளித்த தவள மாடங்களில் மன்மதனையும் ரதியையும் ஒத்த காளைகளும் கன்னியர்களும் காதல் புரிந்து களித்தார்கள். தேவாலயங்களில் ஆலாசிய மணிகள் ஒலித்தன. அரண்மனையில் கீத வாத்தியங்களின் இன்னிசை கிளம்பிற்று. நடன மண்டபங்களில் சதங்கைகள் சப்தித்தன. கடை வீதிகளில் பொதுஜனங்களின் கலகலத் தொனி எழுந்தது. அகில் புகையின் மணமும் சந்தனத்தின் வாசனையும் நறுமலர்களின் சுகந்தமும் எங்கெங்கும் பரவியிருந்தன.

ஒரு மாதத்துக்கு முன்பு மேற்கண்டவாறு கந்தர்வபுரியாகக் காட்சியளித்த வாதாபி நகரம் இருந்த இடத்தில் இன்றைக்குச் சிற்சில குட்டிச் சுவர்கள் நின்றன. மற்ற இடத்திலே யெல்லாம்

அமரர் கல்கி



கரியும் சாம்பலும் புகையேறிய கல்லும் மண்ணும் காணப்பட்டன. சில இடங்களில் அவை கும்பல் கும்பலாகக் கிடந்தன; சில இடங்களில் அவை பரவிக் கிடந்தன.

இடிந்து விழாமல் புகையினாலும் தீயினாலும் கறுத்துப் போய் நின்ற குட்டிச் சுவர்களின் ஓரமாகச் சிற்சில மனிதர்கள் —உயிர் பெற்று எழுந்த பிரேதங்களையும் பேய் பிசாசுகளையும் ஒத்த மனிதர்கள் — ஆங்காங்கே திரிந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் சிலர் எங்கே போகிறோம் என்ற எண்ணமே இல்லாமல் பிரமை கொண்டவர்கள் போல் நடந்தார்கள். வேறு சிலர் ஆங்காங்கே உட்கார்ந்து கரியையும் மண்ணையும் கிளறிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் யாரைத் தேடினார்களோ, அல்லது எதைத் தேடினார்களோ, யாருக்குத் தெரியும்?

**வா**தாபி நகரம் இருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் இடிந்தும் தகர்ந்தும் கிடந்த கோட்டை மதிலுக்கு அப்புறத்தில் அந்த மார்கழி பௌர்ணமி சந்திரன் முற்றிலும் வேறுவிதமான மற்றொரு காட்சியைப் பார்த்தது. இலட்சக்கணக்கான பல்லவ — பாண்டிய வீரர்கள் வெற்றிக் கோலாகலத்திலும் களியாட்ட ஆரவாரங்களிலும் ஈடுபட்டிருந்தார்கள். அவர்கள் படையெடுத்து வந்த காரியம் யாரும் எதிர்பார்த்ததைக் காட்டிலும் சுலபமாக நிறைவேறி மகத்தான வெற்றி கிடைத்த காரணத்தினால் அவர்களுக்கு ஏற்பட்ட மதோன்மத்தம் ஒரு பக்கம்; வாதாபி நகரத்தின் கொள்ளையில் அவரவர்களுக்குக் கிடைத்த பங்கினால் ஏற்பட்ட உற்சாகம் ஒரு பக்கம்; இவற்றோடு கூட இந்தப் பாழாய்ப் போன மயான பூமியில் — அவர்களாலேயே மயானமாக்கப்பட்ட பிரதேசத்தில் — இன்னும் ஒரு தினந்தான் இருக்க வேண்டும், அதற்கு அடுத்த தினம் சொந்த நாட்டுக்குப் புறப்படப் போகிறோம் என்ற எண்ணமானது அவர்களுக்கு அளவில்லாத எக்களிப்பை உண்டுபண்ணி இரவெல்லாம் தூக்கமின்றிக் களியாட்டங்களில் ஈடுபடும்படி செய்திருந்தது.

அந்த வெற்றி வீரர்களிலே சிலர் ஆடிப் பாடினார்கள்; சிலர் இசைக் கருவிகளிலிருந்து பல வகை அபஸ்வரங்களைக் கிளப்பினார்கள்! சிலர் கும்பலாக உட்கார்ந்து கதை கேட்டார்கள்; சிலர் வாதாபி யுத்தத்தில் தாங்கள் செய்த வீர பராக்கிரமச் செயல்களைப் பரஸ்பரம் சொல்லிப் பரிமாறிக் கொண்டிருந்தார்கள்; சிலர் மார்கழி மாதத்துக் குளிரைப் போக்கிக் கொள்வதற்காக எரிகிற வீடுகளிலிருந்து பிடுங்



டுக் கொண்டு வந்த கட்டைகளைப் போட்டுக் கொளுத்திக் கொண்டும் தீயைச் சுற்றி உட்கார்ந்து கொண்டும் குளிர் காய்ந்தார்கள்.

அநேகர் வாதாபியிலிருந்து அவரவர்கள் கொள்ளையடித்துக் கொண்டு வந்திருந்த செல்வங்களைச் சேர்த்து வைத்துக் கொண்டு பூதம் காப்பது போல் காத்து வந்தார்கள். இப்படிக் கொள்ளை கொண்ட பொருளை அதி ஜாக்கிரதையாகப் பாதுகாத்தவர்களுக்குள்ளே,—சற்றுக் கவனித்துப் பார்த்தோமானால், — நமக்குத் தெரிந்த வயோதிக வீரர் ஒருவரைக் காணலாம். சோழ மன்னர் பரம்பரையைச் சேர்ந்த செம்பியன் வளவன், — மங்கையர்க்கரசியின் அருமைத் தந்தைதான் அவர். தாம் காஞ்சியிலிருந்து புறப்பட்டு வந்த பிறகு தம் மகளுக்கு நேர்ந்த அரும்பெரும் பாக்கியத்தை அறியாதவராய் அவளுடைய திருமணத்தின் போது ஸ்திரீ தனம் கொடுப்பதற்கென்று எரிந்து கொண்டிருந்த வாதாபி நகரிலிருந்து மிக்க பரபரப்புடனும் சுறுசுறுப்புடனும் ஏராளமான முத்துக்கள், மணிகள், இரத்தினங்கள், தங்கம் வெள்ளி ஆபரணங்கள் ஆகியவற்றை அவர் எடுத்துக் கொண்டு வந்து சேர்த்திருந்தார்.

இவ்விதம் கிழவர் அரும் பாடுபட்டுச் சேகரித்திருந்த பொருள்களுக்கு ஒரு நாள் ஆபத்து வரும் போல் இருந்தது. இரவு நேரங்களில் சில சமயம் மாமல்லர், தம் சேனை வீரர்கள் தங்கியிருக்கும் இடங்களுக்குச் சென்று பார்வையிட்டு, சமயோசிதமான பாராட்டு மொழிகள் கூறி உற்சாகப்படுத்திவிட்டுப் போவது வழக்கம். ஊருக்குப் புறப்பட வேண்டிய நேரம் நெருங்கி விட்டபடியால் சென்ற நாலு தினங்களாகச் சக்கரவர்த்தி தினந்தோறும் இரவு வெகுநேரம் வரையில் வீரர்கள் தங்கியிருந்த இடங்களுக்குச் சென்று அவர்களைப் பார்த்தும் பேசியும் சந்தோஷப்படுத்தி வந்தார்.

அந்த வெற்றி வீரர்களைத் தம்முடன் நிரந்தரமாகப் பந்தப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தோடுகூட, போர்க்களத்திலும் கோட்டைத் தாக்குதலிலும் அரும் பெரும் வீரச் செயல்கள் புரிந்தவர்களை நேரில் தெரிந்துகொண்டு அவர்களுக்கு விசேஷ சன்மானம் அளிக்க வேண்டுமென்னும் விருப்பமும் மாமல்லரின் மனத்திலே இருந்தது.

மேற்சொன்ன நோக்கங்களுடன், மானவன்மன், ஆதித்த வர்மன், சத்ருக்னன் ஆகியவர்கள் பின்தொடர, படை வீரர்களைப் பார்த்துக் கொண்டு வந்த நரசிம்ம சக்கரவர்த்தி நம் சோழ வம்சத்து வீரக் கிழவரின் அருகில் வந்ததும்



சிறிது நின்று அவரை உற்றுப் பார்த்தார். ''ஆ! இந்தப் பெரியவரை நாம் மறந்தே போய்விட்டோமே?'' என்று மெல்லச் சொல்லிவிட்டு, வெளிப் படையாக, ''இது என்ன ஐயா, இவ்வளவு பொருள்களை நீர் எப்படிச் சேர்த்து வைத்துக் கொள்ளத் துணிந்தீர் ? ஒவ்வொருவரும் தம்மால் தூக்கிக் கொண்டு போகக் கூடிய அளவு தானே வைத்துக் கொள்ளலாம் என்பது நமது கட்டளை?'' என்று கேட்டார்.

''சக்கரவர்த்தி! நூறு வீரர்களுடன் வந்தேன் ; என்னைத் தவிர அவ்வளவு பேரும் போரில் உயிர் துறந்தார்கள்.''

''ஆகா ! சோழ நாட்டு வீரந்தான் வீரம் ! — ஆனால், இதைக் கேட்பதற்கு நம் சேனாதிபதி இங்கில்லையே?'' என்று சக்கரவர்த்தி அருகிலிருந்தவர்களிடம் சொல்லிவிட்டு, ''இருக்கட்டும், ஐயா ! நூறு வீரர்களும் போரில் இறந்திருந்தால் வீர சொர்க்கத்துக்குப் போய்ச் சேர்ந்திருப்பார்கள். அவர்களுக்கு இந்தப் பொருள்களினால் ஒரு பயனும் இல்லையே ?'' என்றார்.

''பல்லவேந்திரா! என் ஏக புதல்விக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும். புராதன சோழ வம்சத்தின் பெருமைக்கு உகந்த முறையில் ஸ்திரீதனம் கொடுக்கவேண்டும் என்று விரும்பி...'' என்று கிழவர் தயங்கினார்..

மாமல்லர் புன்னகையுடன் மானவன்மரைப் பார்த்து, ''இவருக்கு விஷயமே தெரியாது போல் இருக்கிறது. சொல்லட்டுமா ?'' என்று கேட்க, ''வேண்டாம், பிரபு! இப்போது இடீரென்று சொன்னால் சந்தோஷ மிகுதியால் கிழவரின் பிராணன் போனாலும் போய்விடும் !'' என்றார் மானவன்மர்.

உடனே மாமல்லர், ''மானவன்மரே ! இந்தப் பெரியாருடைய பெண்ணின் ஸ்திரீதனத்துக்காக நூறு யானையும், அந்த நூறு யானை சுமக்கக்கூடிய திரவியங்களும் கொடுங்கள்!'' என்று சொல்லிவிட்டு மேலே நடந்தார்.

செம்பியன் வளவன் தம் செவிகளையே நம்ப முடியாதவராய்ப் பிரமித்துப் போய் நின்றார்.

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டு அக்கம் நின்ற வீரர்கள், ''வள்ளல் மாமல்லர் வாழ்க! வாழ்க!'' என்று கோஷங்களைக் கிளப்பினார்கள்.

சக்கரவர்த்தியும் அவருடைய கோஷ்டியும் அப்பால் சென்று வெகு நேரம் ஆன வரையில் அந்த வீரர்களில் பலர் மாமல்லரின் வீர பராக்கிரமங்களைப் பற்றியும் அவருடைய அரும் பெரும் குணாதிசயங்களைப் பற்றியுமே பேசிக் கொண்டிருந்தார்கள். எனினும், இடையிடையே உற்சாகக் குறைவை உண்டு பண்ணிய பேச்சு ஒன்றும் எழுந்தது. அது என்னவெனில், முன்னெல்லாம் போல் சக்கரவர்த்தியுடன் ஏன் சேனாதிபதி பரஞ்சோதி தொடர்ந்து வரவில்லை என்பதுதான்.

வீர மாமல்லரும் வீரர் பரஞ்சோதியும் நகமும் சதையும் போலவும் பூவும் மணமும் போலவும் பிரிக்க முடியாத நண்பர்கள் என்பதாக இத்தனை நாளும் அவர்களை அறிந்தவர்கள் எல்லாரும் நினைத்துக் கொண்டிருந்தார்கள். இது விஷயம் தமிழகத்து வீரர்களுக்கெல்லாம் மகிழ்ச்சியையும் பெருமையையும் அளித்து வந்தது. இராஜ குலம் எதிலும் பிறவாதவரும், இராஜ வம்சத்தோடு உறவு பூணாதவருமான ஒருவர் தம் வீரம், ஒழுக்கம், ஆற்றல் இவை காரணமாகவே சேனாதிபதிப் பதவியை அடைந்திருந்ததும், அவருக்கும் சக்கரவர்த்திக்கும் அத்தகைய நெருங்கிய நட்பு ஏற்பட்டிருந்ததும் மற்ற வீரர்களுக்கெல்லாம் மிக்க பெருமையை அளித்து வந்தது.

ஆனால், அப்பேர்ப்பட்ட என்றும் அழியாத சிரஞ்சீவி சிநேகம் என்று எல்லாரும் நினைத்திருந்த சேர்க்கைக்கு, — இப்போது ஊறு நேர்ந்து விட்டதாகத் தோன்றியது. மாமல்லருக்கும் பரஞ்சோதிக்கும் மன வேற்றுமை ஏற்பட்டு விட்டதாகக் காணப் பட்டது. வாதாபிக் கோட்டையைத் தாக்கலாமா வேண்டாமா என்ற விவாதத்திலிருந்து அந்த வேற்றுமை உண்டானதாகச் சிலர் சொன்னார்கள். சிவகாமி தேவி விஷயத்தில் மாமல்லர் மிகக் கடுமையாக நடந்து கொண்டது சேனாதிபதிக்கு ஆறாத மனப் புண்ணை உண்டாக்கிவிட்டதாகச் சிலர் ஊகித்தார்கள். இலங்கை இளவரசரும் ஆதித்த வர்மனும் சேர்ந்து போதனை செய்து மாமல்லருடைய மனத்தில் களங்கம் உண்டு பண்ணிவிட்டதாகச் சிலர் கூறினார்கள். ''அதெல்லாம் ஒன்றுமில்லை ; எல்லோரும் வீண் வம்பு வளர்க்கிறீர்கள். சேனாதிபதிக்கு இடைவிடாத உழைப்பினால் தேக சுகம் கெட்டு விட்டது. அதனால் சக்கரவர்த்தி அவரை வெளியே வராமல் கூடாரத்துக்குள்ளேயே இருந்து இளைப்பாறும்படி கட்டளை இட்டிருக்கிறார்'' என்று ஒரு சிலர் நல்ல காரணத்தைக் கற்பித்தார்கள். நாளைக் காலையில் கொடியேற்றத்துக்குச் சேனாதிபதி வருகிறாரா, இல்லையா என்று பார்க்கலாம். சேனாதிபதி வந்தால் எல்லாச் சந்தேகமும் தீர்ந்து விடும்!'' என்று சிலர் மத்தியஸ்தமாய்ப் பேசினார்கள். (தொடரும்)

# பிரச்னைகள் தீர
# ஸ்டேன்ஸ்டயர்



ஸ்டேன்ஸ் டயர் ரீட்ரெடுகள் மிகவும் நம்பகமானவை.

ஸ்டேன்ஸ் டயர், புகழ் வாய்ந்த டயர்ஸோல்ஸ் பிரத்தியேக அம்சங்களை வழங்குகிறது — தன்னிகரற்ற நீண்ட உழைப்பு.

ஸ்டேன்ஸ் டயர் சிக்கனமானதும் கூட — ஒரு டயரை பலமுறை ரீடிரெட் செய்ய, கூடுதல் வாய்ப்பு — மிகக்

குறைவான செலவில் பல்லாயிரம் மைல்கள்.

தாமதமின்றி, சேவை பெற உடனே அணுகவும்.

**STANESTYRE**

**ஸ்டேன்ஸ்டயர்**

அண்டு ரப்பர் ப்ராடக்ட்ஸ் லிமிடெட்
திருச்சி ரோடு, கோயமுத்தூர்.

தொழிற்சாலைகள் :—

சென்னை, வேலூர், திருச்சி, சேலம், மதுரை, தூத்துக்குடி, பெங்களூர், மங்களூர், விஜயவாடா, செகந்திராபாத், எர்ணாகுளம், கோட்டயம், கள்ளிக்கோட்டை, திருச்சூர்.

MAC (B) ST-1/75

# மலரும் இசை அரும்புகள்



மாஸ்டர் ஸ்ரீராம்

## குமாரி விஜி கிருஷ்ணன்

குழந்தையின் அழுகையை நிறுத்தத் தந்தை கையாண்ட யுக்தி, வயலினை எடுத்து வாசிப்பதுதான்; குழந்தை வயலின் ஒலியில் லயித்து விடும்! இந்தச் சூழ்நிலையில் வளர்ந்தவள் திரு டி. என். கிருஷ்ணனின் குமாரி விஜி என்று செல்லமாக அழைக்கப்படும் விஜய லட்சுமி. இன்று அவள் பன்னிரண்டாவது வயதை எட்டிப்பிடிக்கும்போதே தந்தையுடன் கூட மேடையில் அமர்ந்து ஐம்பதுக்கு மேற்பட்ட கச்சேரிகளில் வாசித்து விட்டாள்!

ஐந்தாவது வயதிலேயே முறைப்படி வயலினின் பயிற்சி பெற ஆரம்பித்தாள் விஜி. ஒன்பதாவது வயதிலிருந்து தந்தையுடன் மேடையில் அமர்ந்து கூடவே வாசிக்கும் திறமையைப் பெற்று விட்டாள்.

கான்வென்டில் எட்டாம் வகுப்புப் படிக்கும் விஜி, தினசரி காலையிலும் மாலையிலும் வயலின் சாதகம் செய்யத் தவறுவதில்லை. படிப்பிலும் நல்ல கவனம் செலுத்துகிறாள்.

சென்ற ஆண்டு சுமார் எட்டு மாத காலம், ஸ்ரீ டி. என். கிருஷ்ணன், அமெரிக்காவுக்கு வயலின் பயிற்சி அளிக்கச் சென்றிருந்த போது, விஜியும் அவர் கூடவே போயிருந்தாள். அங்கே வில்லார்ட் ஜூனியர் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து தன் படிப்பைத் தொடர்ந்தாள். பள்ளி நிர்வாகிகள், பள்ளிக்கூட வாத்தியக் கோஷ்டியில் வயலின் வாசிக்க இவளுக்கு நிறைய வாய்ப்புக் கொடுத்தனர்.

விஜிக்கு மிகவும் பிடித்த ராகம் தோடி. விஜிக்கு மூன்று வயதிலிருந்தே வயலின் மீது ஈடுபாட்டைத் தோற்றுவித்த பெருமை திரு கிருஷ்ணனின் தகப்பனார் திரு ஏ. நாராயண அய்யரையே சாரும்! பேத்தியைக் கொஞ்சியும், கெஞ்சியும் அவளுக்குப் பயிற்சி அளித்ததோடு, அவளுடைய பிஞ்சு விரல்களுக்கு ஏற்றாற்போல் ஒரு சிறிய வயலினையும் தாமே தயாரித்துக் கொடுத்தார். ராசியான கை, ஆசியும் வழங்கியது.

விஜி முதல் தடவையாகத் திரு கிருஷ்ணனுடன் சேர்ந்து கச்சேரி செய்த இடம், திருப்பதி வேங்கடேசப் பெருமாளின் திருத்தலத்தில்! பிரும்மோத்சவத்தை ஒட்டிய கச்சேரி! அருள் நிறைந்த இடம்! அருமையான எதிர்காலம் அமையக் கேட்பானேன்?

விஜி - கிருஷ்ணன்



## மாஸ்டர் ஸ்ரீராம்

டேப் ரிகார்டரிலிருந்து பரவிக் கொண்டிருந்த இசையை ரசித்துக் கொண்டே சிறுவன் விரல்களால் தன் முழங்காலில் வெகு சுவாரசியமாகத் தாளம் போட்டுக் கொண்டிருந்தான். இதை செளடய்யா கவனித்து விட்டார்.

உடனே சிறுவனின் தந்தையிடம், ''இவனுக்கு லய ஞானம் நிறைய இருக்கும்போலிருக்கிறது. மிருதங்க வழியில் திருப்பி விடுங்கள்'' என்று சொல்லி வைத்தார்.

பையனின் தகப்பனார் யார் என்று எண்ணுகிறீர்கள்? மணக்கால் ரங்கராஜன்தான்! செளடய்யாவின் யோசனையை ஏற்றுப் பையனைக் குத்தாலம் விசுவநாதய்யரிடம் மிருதங்கம் கற்றுக் கொள்ள அனுப்பி வைத்தார். இன்று மாஸ்டர் ஸ்ரீராம் பள்ளியில் பத்தாம் வகுப்பில் படித்துக் கொண்டே, அவ்வப்போது மேடை ஏறி முதல் ரகக் கச்சேரிகள் பலவற்றிலும் மிருதங்கம் வாசிக்கிறான்.

சிறுவனின் திறமையை வெளி உலகுக்கு அறிவிக்கும் பொறுப்பைத் திருவையாறு தியாகையரின் சன்னதி ஏற்றுக் கொண்டது. நான்கு ஆண்டுகளுக்கு முன்பு ரங்கராஜன், ஆராதனையில் பங்கேற்றபோது பையன் ஸ்ரீராமும் பக்க வாத்தியம் வாசிக்கும் விருப்பத்தைத் தெரிவித்தான். அதுவரை அவன் மேடையில் அமர்ந்து வாசித்ததில்லை. அந்த இடத்தில் மறுத்துச் சொல்ல மனமின்றி ரங்கராஜன் இணங்கினார். அன்று பையன் அமர்க்களமாக மிருதங்கம் வாசித்தான்.

ரசிகர்கள் சிறுவனின் திறமையைக் கண்டு வியந்து மகிழ்ந்தார்கள். கச்சேரி முடிந்ததும் அவனை அப்படியே அலாக்காகத் தூக்கிக் கொண்டு போய் விட்டார்கள்! இந்தப் பரவசத்தின் விளைவு இரவு திட்டமிட்டபடி ரங்கராஜன் குடும்பத்தினர் சென்னைக்குத் திரும்ப முடியவில்லை.

வானொலியில் ஒலிபரப்பப்பட்ட இந்த நிகழ்ச்சியைச் சென்னையிலிருந்து கேட்டு ரசித்துப் பரவசமடைந்தார் செம்பை. அதோடு ரங்கராஜன் வீட்டுக்கு நேரில்வந்து பாராட்டி, வரும் வாரத்தில் மயிலாப்பூர் கபாலி கோவிலில் தாம் பாடவிருக்கும் கச்சேரிக்கு ஸ்ரீராம்தான் மிருதங்கம் வாசிக்க வேண்டும் என்றும் சொன்னார்.

படிப்பு பாதிக்கப்படக் கூடாது என்பதால் வெளியூர் பிரயாணங்களை அதிகம் மேற்கொள்

வதில்லை மாஸ்டர் ஸ்ரீராம். ரங்கராஜனின் கச்சேரிகளுக்கு அவன் வாசிக்கும்போது, தம் பையன் என்று அவர் தயவு காட்டுவதில்லை. நிரடலான பல்லவிகளை அவர் கையாளுவார். ஸ்ரீராம் தயங்காமல் வாசிப்பான்.

கடந்த இரண்டு வருட காலமாக ஸ்ரீராம், பாலக்காடுமணி அய்யரிடம் பயிற்சி பெறுகிறான். மணியான சிறுவன் போங்கள்!

## செல்வன் தியாகராஜன்

புல்லாங்குழல் வித்வான் திரு என். ரமணி, தம் பையன் தியாகராஜன், வயலின் கற்றுக்கொண்டு பிரகாசிக்க வேண்டுமென்று ஏனோ விரும்பினார். ஆகவே, திரு எம். எஸ். கோபாலகிருஷ்ணனின் சிஷ்யரான நரசிம்மமூர்த்தியிடம் பயிற்சிக்கு அனுப்பி வைத்தார்.

ஆனாலும் சில சமயங்களில் பையன் தியாகராஜன், தானாகவே வீட்டில் புல்லாங்குழலைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு அனாயாசமாக வாசித்ததையும் கவனித்தார். அவ்வளவுதான்! இந்த ஆர்வத்தை வளர்க்க உடனடியாகப் புல்லாங்குழல் பயிற்சி அளிக்கத் தொடங்கினார்.



தியாகராஜன் - ரமணி

1974ம் ஆண்டு செப்டம்பர் இருபத்தி இரண்டாம் தேதியன்று சென்னை கிருஷ்ண கான சபாவில் திருவாரூர் தியாகராஜனின் அரங்கேற்றம் நடந்தது. தந்தை ரமணியுடன் கூட மேடையில் அமர்ந்து முதல் தடவையாக ரசிகர்கள் முன்னால் தன் திறமையை வெளிப்படுத்தினான்.

இதற்குப் பிறகு பம்பாய், பெங்களூர், டில்லி என்று எங்கும் சிறுவன் தியாகராஜனின் வேணுகானம் ஒலிக்கத் தொடங்கியது. பள்ளியில் ஒன்பதாம் வகுப்புப் படிக்கும் சிறுவன். இசையில் காண்பிக்கும் ஆர்வத்தைப் படிப்பிலும் சமமாகக் காட்டும் சுபாவம்.

சமீபகாலத்தில் பெங்களூரில் ஒரு கச்சேரி. ரமணியும் தியாகராஜனும் போயிருந்தார்கள். மறுநாள் பள்ளியில் சரித்திர பூகோள பாடங்களில் பரீட்சை. ஆகவே அவகாசம் கிடைத்த போது போன இடத்தில் படிக்க அந்தப் பாடப் புத்தகங்களையும் எடுத்துச் சென்றான். திரும்பி ரயிலுக்கு வரும்போது ஒரே அவசரம். ரயிலில் ஏறிய பிறகு தியாகராஜனுக்கு, புத்தகங்கள் எல்லாம் பெட்டியில் இருக்கிறதா என்ற சந்தேகம் வந்து விட்டது. உடனே பெட்டியைத் திறந்து பார்க்கும்படி துளைத்து எடுத்து விட்டான்! அப்பாடா! புத்தகங்கள் பத்திரமாக இருந்தன!

தியாகராஜன் சென்ற ஆண்டு ஸ்கந்த ஷஷ்டி விழா ஒன்றில் புல்லாங்குழல் கச்சேரி செய்தபோது அவனுக்குப் பக்க வாத்தியமாகப் பாலக்காடு மணி ஐயர் மிருதங்கம் வாசித்தார். தியாகராஜனை மனம் விட்டுப் பாராட்டினார்.

''நான் மேடை ஏறிக் கச்சேரி செய்ய ஆரம்பித்து ஏறத்தாழ இருபது வருஷங்களுக்கு அப்புறம்தான், பாலக்காடு மணி ஐயர் என் கூட மிருதங்கம் வாசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. என் பையனுக்கு ஒரு வருஷ அனுபவத்துக்குள்ளேயே அந்த அதிருஷ்டம் கிடைத்து விட்டது'' என்கிறார் ரமணி.

வேணுகானத் துறையில் வெகுவாக முன்னேறி விட்டாலும், முதலில் பயிலத் தொடங்கிய வயலினைத் தியாகராஜன் விட்டு விடவில்லை. அதையும் சாதகம் செய்கிறான்! வாய்ப்பாட்டில் ஆர்வம் இருப்பதால், ராகவ ராவ் அவர்களிடமும் பாடம் கேட்கிறான்.

தியாகராஜனுக்கு மிகவும் ஈடுபாடான ராகம் பைரவி.

ரமணியின் குருவான மாலி, இன்னும் தியாகராஜன் வாசிப்பைக் கேட்கவில்லை. ''பத்திரிகைகளில் உன் பையன் திறமையைப் பற்றிப் படித்தேன். ரொம்ப சந்தோஷம்'' என்று பாராட்டிக் கடிதம் எழுதியிருக்கிறார்.

## செல்வி ஸ்ரீவித்யா

ஐந்து வயதுச் சிறுமி. அப்பர் கே. ஜி. வகுப்பு. பார்க்கத் துறுதுறுப்பாகச் சுடிகையாக இருப்பாள். பள்ளிக்கூட விழாவில் அந்தச் சிறுமி நடனம் ஆடினால் நிகழ்ச்சி சோபிக்கும் என்று ஆசிரியை நினைத்தார்.

''வேண்டாம் டீச்சர்! நான் விழாவில் வீணை வாசிக்கிறேன்!'' என்றாள் அந்தச் சிறுமி.

அந்தக் குழந்தை அப்படிச் சொன்னதற்குத் தகுந்த காரணமும் பின்னணியும் உண்டு. காரைக்குடி வீணை சகோதரர்கள் என்று அந்த நாட்களில் மிகவும் பிரபலமாக இருந்த ஜோடியில் ஒருவரான சுப்பராமய்யரின் பேத்தி ஸ்ரீமதி ராஜேசுவரி பத்மநாபன், இந்தச் சிறுமியின் தாயார். வீட்டில் ஒலித்துக் கொண்டிருக்கும் வீணையின் நாதத்தைக் கேட்டுக் கேட்டுச் சிறுமிக்கு இசை ஞானம் தன்னால் வளர்ந்திருந்தது, வீணை வாசிக்கவும் ஆரம்பித்திருந்தாள்.

சின்னக் குழந்தை பள்ளியில் சொல்லிவிட்டு வந்ததைக் கேட்ட பெரியவர்கள் திடுக்கிடவில்லை. இடைவெளியில் கிடைத்த பதினைந்து நாட்களில் இரண்டு கீர்த்தனைகள்

ஸ்ரீவித்தியா



வாசிக்கத் தயார் செய்து விட்டார்கள். அத்தனை பெரிய வீணையில் கை எட்டச் சிரமப்பட்டாலும் பள்ளி விழாவில் அமர்க்களமாக வாசித்துப் பாராட்டைப் பெற்றுவிட்டாள்.

அப்புறம் தொடர்ந்து வீணைப் பயிற்சி தான். இன்று ஐந்தாம் வகுப்புப் படிக்கும் பத்து வயதுச் சிறுமி இவள். ராஜேசுவரி சென்னை கலாக்ஷேத்திராவில் வீணைப் பயிற்சி அளிக்கும் ஆசிரியை. அவரிடம் கற்றுக் கொள்பவர்களைக் கவனித்தே சிறுமி ஸ்ரீவித்யாவுக்கு ஞானம் வளர்ந்திருக்கிறது.

சீக்கிரமே ஒரு நல்ல நாளில் தன் தாயாருடன் சேர்ந்து அமர்ந்து ஸ்ரீவித்யா தன் அரங்கேற்றத்தை நடத்தவிருக்கிறாள்.

## திரு பீட்டர் சைல்ட் (Peter Child)

இருபத்திரண்டு வயதான இளைஞர். ஆனாலும் பெயரில் குழந்தை ஒட்டிக் கொண்டிருக்கிறது. மனத்திலும் குழந்தைத்தனம் மறையவில்லை. பிரிட்டிஷ் பிரஜையான இவருக்குச் சிறு வயதிலிருந்தே இசை ஞானம் உண்டு. ஒன்பதாவது வயதிலேயே பியானோ கச்சேரி நடத்தும் திறமை பெற்றவர். பதின்மூன்றாவது வயதில் சொந்தமாக இசை அமைக்க முற்பட்டார்.

பீட்டர் சைல்ட்

1971ம் ஆண்டில் கல்லூரியில் தத்துவத்தைப் பாடமாக எடுத்துக் கொண்டு படித்தார். ஆனால் இரண்டு ஆண்டுகளில் அவருக்கு இசை ஆர்வம் மீண்டும் தலைதூக்கியது. 1973ல் அமெரிக்க சர்வ கலாசாலை ஒன்றில் சேர்ந்தார். மேல்நாட்டு இசையிலும் இசை புனைவதிலும் பட்டம் பெற்றார். உடனே, தென்னிந்தியக் கர்நாடக சங்கீதத்திலும் பயிற்சி பெற விருப்பம் ஏற்பட்டது. யாருடைய கச்சேரியையும் இவர் அதுவரை நேரில் கேட்டதில்லை. இசைத்தட்டுக்களைத்தான் கேட்டிருக்கிறார்.

அமெரிக்க சர்வகலாசாலை இவருக்கு ஓர் ஆண்டு கால உபகாரச் சம்பளம் கொடுத்துச் சென்னைக்கு அனுப்பி வைத்திருக்கிறது. அரியக்குடி இசைவழியைச் சேர்ந்த திரு பி. ராஜம் ஐயரிடம் இவர் இங்கே கர்நாடக இசை பயிலுகிறார்.

''பையன் ரொம்ப ஆர்வம் உள்ளவன். ரசிக்கும் தன்மை நிறைய இருக்கிறது. நம்முடைய கச்சேரிகளுக்கு அவ்வப்போது அழைத்துப் போகிறேன். நன்றாக ரசிக்கிறான். அதுவே நல்ல அஸ்திவாரம்'' என்கிறார் வருங்கால 'சைல்ட்' பாகவதரின் இன்றைய குருநாதர் ராஜம் ஐயர்.

— பேட்டி :
**கோமதி சுவாமிநாதன்**

---

## "ஃபுல்பெஞ்ச்" கச்சேரி !

அது 1928ம் ஆண்டு. "இன்று காஞ்சிபுரம் நாயனாப் பிள்ளை, ஸந்தான ராமர் கோவில் உற்சவத்தில் ஃபுல் பெஞ்ச் கச்சேரி" என்று வித்வான் சந்தான ஐயங்கார் சொன்னார். நான் நண்பர்களுடன் சென்றேன். கச்சேரி ஐந்து மணி நேரம் நடந்தது. ஃபுல் பெஞ்ச் பக்கவாத்தியங்கள்: கோவிந்தசாமி பிள்ளை - பிடில், அழகநம்பி பிள்ளை - மிருதங்கம், புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி பிள்ளை - கஞ்சிரா, பக்கிரியா பிள்ளை - கொன்னக்கோல், உமையாள்புரம் சுந்தரம் அய்யர் - கடம், கும்பகோணம் வேணுச் செட்டி - டோலக், ஆதிச்சபுரம் சீதாராமையா - மோர்சிங்.

இவ்வளவு வித்வான்களையும் நிர்வகிக்கும் சக்தி நாயனாப் பிள்ளையிடம் இருந்தது.

- மதங்கர்

* * * *

## திடீர் வர்ணம்

ஒரு நாள் மாலை, டைகரின் விசிறிகளாகிய நாங்கள் மூவர் அவரிடம் பேசிக் கொண்டிருந்தோம். எங்களில் ஒருவர் வேடிக்கையாகச் சொன்னார்: "எத்தனையோ செய்கிறீர்களே, என்னைப் பற்றி ஒரு பாட்டு இயற்றுங்களேன் பார்க்கலாம்!"

டைகர் கண் சிமிட்டியபடியே, "ஆகட்டும், இப்போதே ஒரு வர்ணம் பாடுகிறேன்" என்றார். சொன்ன மறுகணமே அதைச் செய்தும் காட்டினார். அதன் அமைப்பு கன கச்சிதமாக இருந்தது. ஆனால் மறு நாள் காலை அவரை நான் சந்தித்து அந்த வர்ணத்தை எழுதித் தருமாறு கேட்டபோது அவர் கூறினார் : "இதெல்லாம் யாருக்கு ஞாபகம் இருக்கிறது ? வேண்டுமானால் சொல்லு இப்போது வேறு ஒரு வர்ணம் இயற்றித் தருகிறேன்!"

- எஸ்.ஒய்.கே.

# ஓல்ட் ஸ்பைஸ்
## ஆணின் வெற்றிக்கு அடிகோலுகிறது.



எழில்துள்ளும் பெருங்கடல்.
அழகுப் பொக்கிஷமாக
அவள் அருகிலிருக்க—
ஆம் அவன் ரசனைக்கு
சுருதி கூட்டுகிறது.
வழவழவென ஷேவ்,
குளுகுளுவென குளியல்,
எண்ணத்தைக் கிளர்ந்திடும்
எண்ணற்ற அலுவல்கள்.
இவற்றிற்கெல்லாம்
வேண்டிய உற்சாகம்
பொங்கும் புத்துணர்ச்சியை
அள்ளித்தரும்
ஓல்ட் ஸ்பைஸ்.

ஆண்களின் அழகுக்காக
ஓல்ட் ஸ்பைஸ் அளிக்கும்
அணிவரிசை:

- ஆஃப்டர் ஷேவ் லோஷன்*
- கொலோன்*
- லாதர் ஷேவிங் க்ரீம்*
- பிரஷ்லெஸ் ஷேவிங் க்ரீம்
- பாடி டால்க்*
- ஹேர் க்ரீம்
- பிரிலியண்டைன்.

# ஓல்ட் ஸ்பைஸ்
## ஆண்மையின் சின்னம்







*Old Spice*
**the mark of a man**

* எலுமிச்சை மணத்திலும் கிடைக்கின்றன.

இந்தியாவெங்கும் தேர்ந்தெடுக்கப்பட்ட கடைகளில் கிடைக்கின்றன. தயாரிப்பவர்கள்: கோல்ஃபாக்ஸ் லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட். லிட்., மெனரிஸ்-ஷல்டன் எண்டர்ப்ரைஸ்.

OS 2/TAM



# இன்பத் தென்றல்

குல்ஷன் நந்தா

தமிழாக்கம்:

ரா. விழிநாதன்

ரூபா அவன் கைகளைப் பிடித்து உதறினாள். அவன் கடகடவென்று சிரித்தான். அவன் வாய் நாற்றம் ரூபாவின் மூக்கைப் பலமாகத் தாக்கவே அலமலந்து போய் மூக்கைப் பிடித்துக் கொண்டாள். ஜான் ராணுவ 'ஸல்யூட்' அடித்துவிட்டு அங்கிருந்து வெளியேறினான்.

அவன் தெருவில் இறங்கித் திருப்பத்தை அடைந்து கண் பார்வையிலிருந்து மறையும் வரை ரூபா வாய் திறவாமல் அவனையே பார்த்தபடி நின்றாள். ஜானின் அரக்கச் சிரிப்பு அவள் செவிகளில் ஒலித்துக்கொண்டிருந்தது. அவளது மென்மையான ரோஜாக் கன்னங்களில் அவன் நிமிண்டிய அடையாளம் கலையாமல் அப்படியே இருந்தது.

ஜான் ரூபாவுக்குத் தகப்பன் ஆக வேண்டும். அவள் தாயார் ஜானைக் கல்யாணம் செய்து கொண்டபொழுது, ரூபாவுக்கு இரண்டே வயதுதான். அவள் பெரியவள் ஆகப் பெரியவள் ஆக ஜானின் கண்களுக்குத் துரும்பாக உறுத்தினாள். அவன் அவளைக் காரணம் இல்லாமல் அதட்டுவான், அடிப்பான். அம்மா அவளுக்காகப் பரிந்து கொண்டால், அவனுடைய அசிங்கமான திட்டுக்களையும் வசவுகளையும் கேட்க நேரும்.' அவன் தினமும் சாராயம் குடித்து விட்டுத்தான் வீடு திரும்புவான். அம்மா — பெண்ணின் தூக்கத்தைக் கெடுப்பான். அவனது தொல்லை தாளாமல் போகவே, ரூபாவின் தாய் ஒரு நாள் வழியின்றி எதிர்ப்புக் குரல் எழுப்பினாள். அவள் அவனது கொடுமைகளை எத்தனை நாட்கள்தான் தாங்குவாள், பாவம்! மகளுக்காக அவள் கணவனைத் துறந்தாள். ஜானுக்கும் ரூபாவுக்கும் இடையே இணைப்பாக அவளால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. அது கடைசியில் மண விலக்கு வரையில் கொண்டு விட்டது. அப்புறம் நீண்ட காலம் ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்ளவில்லை. ஒருவேளை ஜான் அந்த நகரத்தை விட்டே போயிருந்தான் போலும்! ஆனால் இப்பொழுது இரண்டொரு ஆண்டுகளாக அவன் தன் மனைவியை நெருங்க முயன்று

கொண்டிருந்தான். ரூபாவுக்கு இது பிடிக்கவில்லை, இருந்தாலும் தாயாரிடம் இதைப் பற்றிக் கூறுவது அவளுக்கு உசிதமாகப் படவில்லை. அவள் ஜானை வெறுத்தாள், அவனை நினைத்தாலே நடுங்கினாள்.

ஜானைப் பார்த்ததும், தாயாரின் கடந்த கால வாழ்க்கை அழியாச் சித்திரமென அவள் மனத் திரையில் தோன்றியது. அந்த எண்ணங்களையே உதறி எறிகிறாற்போல் அவள் தன் தலையை ஓர் உதறல் உதறிக்கொண்டாள். அப்புறம் விடுவிடுவென்று உள்ளே போனாள். சோர்ந்து களைத்திருந்த தாயார் வாட்டமே உருவாகப் படுக்கையில் அமர்ந்திருந்தாள். அவள் மிகவும் பலவீனமாகத் தோன்றினாள். ரூபாவைப் பார்த்ததும் அவள் வாடிய முகம் மலர்ந்தது. அது வாடிய மலர் உயிர்ப்புக் கொண்டாற் போல் இருந்தது.

ரூபா கட்டிலுக்கு அருகில் நின்று தாயாரின் முகத்தைச் சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்தாள். அப்புறம் அப்படியே அவளைத் தழுவிக் கொண்டாள். தாயாரும் தன் உலர்ந்த குச்சி போன்ற கைகளை அவள் கழுத்தில் சுற்றி உச்சி மோந்தாள்.

''இன்றைக்கு நீ வருவாய் என்று நான் நினைத்தேன்!'' என்றாள் தாயார் அன்போடு.

ரூபா அதற்கு ஒன்றும் பதில் கூறாமல் தாயாரையே சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு, ''அம்மா! ஜான் எதற்காக இங்கு வந்தான்?'' என்று கேட்டாள்.

''என் உடல்நிலை பற்றி விசாரிக்க வந்திருந்தார். நான் நோய்வாய்ப் பட்டிருக்கிறேன் என்பது அவருக்குத் தெரியும்!''

''இல்லை, அம்மா! இன்று மீண்டும் உன்னிடம் பணம் கறக்க வந்திருக்கிறான். எதற்கு வீணில் மூடி மெழுகுகிறாய்?''

தாயார் சோகம் ததும்ப மகளைப் பார்த்தாள். ''என்ன செய்வேன், மகளே! அவர் நிலையைக் காண எனக்கு வருத்தமாக இருக்கிறது!'' என்றாள்.

''உழைத்து ஓடாகிச் சேர்த்த பணத்தை அந்தக் குடிகாரனுக்குக் கொட்டிக் கொடுக்கிறாயே, இது நியாயமா?'' — ரூபாவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

''ரூபா!'' தாயார் ஏதோ சொல்ல வாய் எடுத்தவள், மகளின் கண்களில் வெறுப்பு தீயாகக் கனல்வதைக் கண்டு வாய் அடைத்துப் போனாள்.

''அவன் நிலையைக் காணச் சகிக்கவில்லையென்றால், முன்னால் எதற்கு மண விலக்கு செய்து கொண்டாயாம்?''



ரூபா தன்னையும் மறந்து இந்தக் கேள்வியைக் கேட்டு விட்டாளே ஒழியத் தான் பெரும் தவறு இழைத்து விட்டதாக எண்ணி மனம் புழுங்கினாள். தாயாரின் புண்பட்ட உள்ளத்தை மேலும் குத்திக் கிளறிப் புண்படுத்த அவளுக்கு ஏது உரிமை? இந்தக் கழிவிரக்கத்தினால் தாயாரைப் பேசாமல் பார்க்கலானாள்.

"ஐ ஆம் ஸாரி, அம்மா! என்னை மன்னித்துவிடு!" என்று ரூபா கூறவே, தாயாரின் கண்கள் கலங்கிப் பனித்தன. அவள் அன்போடு ரூபாவின் தலையைக் கோதிவிட்டாள். ரூபாவின் கண்களிலும் நீர் திரையிட்டது. தழுதழுத்த குரலில், "அம்மா! என் பேச்சைத் தவறாக எடுத்துக் கொள்ளாதே. இனி நான் இப்படியெல்லாம் பேச மாட்டேன். நீ எல்லாவற்றையும் அவனுக்கு அள்ளிக் கொடுத்தாலும் நான் வாய் திறக்க மாட்டேன். என்னை மன்னித்துவிடு, அம்மா!" என்றாள்.

தாயார் அவளை ஆரத் தழுவிக்கொண்டு, "அசடே! எதற்கு இப்படி மறுகிப் போகிறாய்? நீதான் எனக்கு உயிர்!" என்றாள்.

தாயாரின் மடியில் முகம் புதைத்தவாறு ரூபா சிறிது நேரம் கிடந்தாள். பிறகு, "அம்மா! பெண்ணாய்ப் பிறந்தவர்கள் பிறர் பொருள். ஒருநாள் இல்லாவிட்டால் ஒரு நாள் பிறந்த வீட்டுப் பாசத்தைத் துறந்து அவள் போக வேண்டியவள் என்று நீ கூறுவாய் அல்லவா?" என்று கேட்டாள்.

"ஆமாமடி குழந்தாய்! சமூகத்தின் விதிமுறை இது!"

"நீ சொல்வது போல், நான் போய்விட்டால் உன் நிலை என்ன ஆகும், அம்மா?" ரூபா தரையை நோக்கியவாறு வெகு வெகுளியாக ஒரு கேள்வியை உதிர்த்தாள்.

தாயார் சட்டென்று அவளை நிமிர்த்தி உட்கார வைத்து அவள் கண்களுக்குள் எதையோ தேட முயன்றாள். அவளுடைய கரு வண்டு விழிகளில் விந்தை ஒளி ஒன்று பளிச்சிடுகிறாற்போலத் தோன்றியது. அத்தகைய ஒளிக் கற்றையை இன்றுவரை தன் மகளின் விழிகளுக்குள் அவள் கண்டதே இல்லை. 'இன்று இவளாகவே இந்தப் பேச்சை எடுக்கிறாளே!' என்று எண்ணியதும் தாயாரின் மூளையிலும் ஓர் எண்ணம் ஒளிவெட்டியது. "நீ யாரையாவது பையன் பார்த்திருக்கிறாயா என்ன?" என்று ஆவல் மீதூரக் கேட்டாள்.

"ஆமாம், அம்மா!"

"யார் அவன்?"

"அவர் பெயர் அநூப்."

"எங்கே இருக்கிறான்?"

"ஊர் சுற்றிப் பார்க்க இந்த ஊருக்கு வந்திருக்கிறார்!"

"என்ன செய்கிறான்? எந்த இனத்தைச் சேர்ந்தவன்? அவனுடைய பெற்றோரைப் பற்றி ஏதாவது தெரியுமா?" ஏக காலத்தில் எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டு விடும் ஆவலில் தாயார் கேள்விகளாக அடுக்கினாள்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது, அம்மா!"

"அப்படியானால் எப்படி ஒரு முடிவுக்கு வந்தாய்?"

"அவர் என்னை மனமாரக் காதலிக்கிறார் என்ற நம்பிக்கையில்!"

மகளின் இந்தப் பதிலைக் கேட்ட தாயார் நீண்ட நேரம் அவளையே வெகு கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். 'இந்தத் தொட்டாற் சுருங்கிப் பெண்ணுக்கு இத்தகைய துணிச்சல் எங்கிருந்து வந்தது?' அவள் வியப்பில் மிதந்தாள்..

தற்செயலாக ரூபாவின் பார்வை பூச்சாடி மேல் பதிந்தது. அதில் புத்தம் புதிய ரோஜாப் பூ சிரித்துக் கொண்டிருந்தது. அதன் அருகில் போய் நின்று கொண்டு, "இந்தப் பூ யார் கொண்டு வந்தார்கள்?" என்று கேட்டாள்.

"உன் ஸிஸ்டர் தெரெஸா!" என்றாள் தாயார்.

"அவள் எப்பொழுது வந்தாள்?" என்று ரூபா துணுக்குற்றுக் கேட்டாள்.

"நேற்று மாலை. என்னைப் பார்த்துப் போக வந்திருந்தாள்!"

"என்னைப் பற்றி ஏதாவது சொன்னாளா?"

"எப்பொழுதும் சொல்கிறதைத்தான் சொன்னாள். 'ரூபா என் 'ஃபேவரிட்' ஸ்டூடண்ட்' என்று."

அதற்குமேல் ரூபா ஏதும் பேசவில்லை. அநூப்பைப் பற்றி அவள் தாயார் எத்தனையோ கேள்விகள் கிண்டிக் கிண்டிக் கேட்டாள். எல்லாவற்றுக்கும் ரூபா மௌனமே சாதித்தாள். அவள் மூளையில் ஸிஸ்டர் தெரெஸாவின் உருவமே திரும்பத் திரும்பச் சுழன்று கொண்டிருந்தது. தன் திருட்டுத்தனம் அம்பலமாகி விட்டது என்ற எண்ணமே அவள் உள்ளத்தை உலுக்கி உலுக்கிப் போட்டது.

(தொடரும்)

---







அடுத்த இதழில்....

அதிசய நிகழ்ச்சி!
மண்ணில் தோன்றிய விண்ணவர்

விநோதச் சட்டங்கள்!
—நாடோடி—

போட்டிக் கதை:
இன்று நான் புதிய மனிதன்

# வல்லவர் வாழ்வார்

கட்டான ஒடம்புக்குத்தான் 'கனகாபிஷேகம்', களைச்சு விழுவானேன்?
சுதாரிச்சுக்கிட்டு எழுங்க சூரப் புலியா. சாப்பிடுங்க ஒகாஸா.
இந்தக் காலத்து டானிக் மாத்திரை. திட பலம், தெம்பு.
ஆரோக்கியம். அதுதானய்யா உங்களுக்கு
'அர்ச்சுன விருது'.

வல்லவராய் வாழ்வதற்கே

## ஒகாஸா

ஆண்களுக்கு வெள்ளி நிற
மாத்திரை—
எல்லா முக்கிய மருந்துக்
கடைகளிலும் கிடைக்கும்

OKASA
THE 20th CENTURY TONIC
RESTORATIVE
OKASA CO. PVT. LTD.
BOMBAY

OKASA CO. PVT. LTD.
12K, Gunbow Street,
P. B. No. 396, Bombay 400 001.

---

## முகருங்கள், முறுவலிக்கலாம்!

Madras Weather
City weather
THE WEATHER
weather
AMRUTANJAN
INHALER

அமிர்தாஞ்சன்
இன்ஹேலர்
உடனடியாக
இதமளிக்கிறது.
மூக்கடைப்பிற்கும்,
சளிக்கும், தலை
கனத்திற்கும் துரித
மான நிவாரணி.
இத்தகைய சளிகளை
விரைந்து தாக்கி
உடனுக்குடன் இதம்
அளிக்க வல்ல ஐந்து
அடிப்படை நிவா
ரணிகளையும்
கொண்டது இது.
அமிர்தாஞ்சன்
இன்ஹேலர் ஒன்றை
எப்போதும் கைவசம்
வைத்திருங்கள்.

அமிர்தாஞ்சன் லிமிடெட்
14/15 லஸ் சர்ச் ரோடு,
சென்னை 600 004

SAA/AM/1939

லட்டு, மைசூர்பாகு, பாதம் ஹல்வா, குலோப்ஜாமூன் என்று தித்திப்புப் பண்டங்களில் பொதுவாகச் சர்க்கரை இருந்தாலும் மற்ற ஒவ்வொரு சாமானுடனும் சேரும் பொழுது தித்திப்பின் ருசி மாறுபடுவதாக நாக்கு உணருகிறது. அதுபோலவே ஸப்த ஸ்வரங்களைத் தக்கபடி உபாசனை செய்யும் பெரும் வித்வான்கள் அவற்றைத் தம் குரல் வண்ணத்துக்குத் தக்கபடி இணைக்கும்போது ஸங்கீதத்துக்கு அவரவர்கள் தனி பிம்பத்தைக் கொடுக்கிறார்கள். இதைத்தான் டைகர் பாணி, ஐயங்கார் வழி என்று சகஜமாய்ப் பேசுகிறோம். ஆனால் எந்தப் பாணியாக இருந்தாலும் நாதத்தின் சூட்சமம் மிளிர்கிறது, எல்லாத் தித்திப்புப் பட்சணங்களிலும் சர்க்கரையின் இயற்கை ருசி ஊடுருவி விளங்குவதுபோல். நாக்கின் விருப்பு வெறுப்பு போல் (''எனக்கு





ஸார், மைசூர்பாகு என்றால் உயிர்'' என்றோ, ''பாதம் ஹல்வாவுக்கு அடுத்த பட்சம்தான் எந்த தித்திப்புப் பண்டமும்'' என்றோ சொல்வது போல்) ஸங்கீத ரஸனையிலும் ''டைகர் பாட்டு பாட்டு ஸார் மகாராஜபுரம் வழி தனி ஸார்'' என்ற அபிப்பிராய பேதங்களுக்கு நாம் கட்டுப்பட்டு விடுகிறோம். கடவுள் ஒன்றுதான்; பக்தர்கள் விதம் விதமாய் அனுபவிக்கிறார்கள் என்ற வேதாந்த தத்துவம் போல் ''நிதி சால சுகமா'', ''அகிலாண்டேசுவரி'' என்ற கீர்த்தனங்கள் ஒன்றுதான். அதை விதம் விதமாய் வித்துவான்கள் அனுபவிக்கிறார்கள். நம்மையும் அனுபவிக்க அழைக்கிறார்கள். கண்ணாடியின் பளபளப்பில் நிற்கிறது பிம்பத்தின் பொலிவு. அதுபோல் கேட்பவரின் ஞானத்தில் இருக்கிறது எந்த பாணியையும் ரஸிக்கும் திறமை. அழுக்குப்பிடித்த கண்ணாடியைக் கையில் வைத்துக்கொண்டு மூல உருவத்தில் குறைபாடுகள் இருப்பதாகச் சீர்தூக்கிப் பேசுவது பிரமை. ஸங்கீதம் உள்ளத்தால் ரஸிக்க வேண்டிய கலை; வெறும் மூளையின் தீட்சண்யத்தினால் அளவிட முடியாது.

இந்தக் கட்டத்தில் ஒரு சம்பவம் என் நினைவுக்கு வருகிறது. ஒரு சமயம் வித்துவான்கள் நடுவில் நடந்த சம்பாஷணை.

''பாகவதர்வாள்! உங்கள் ஸங்கீதத்தைப் பத்து வருஷத்துக்கு முன் கேட்டிருக்கிறேன்.

# சங்கீத பாணிகள்

எஸ். வி. கே.

இந்தப் பத்து வருஷத்தில் உங்கள் ஸங்கீதத்தில் என்ன பக்குவம், என்ன ஆழம்.... அடடா...'' என்று ஒரு ரசிகர் புகழ்ந்தார். பாகவதரின் பதிலில் ஒரு பரம தத்துவம் புதைந்து கிடப்பதாக எனக்குப் பட்டது.

''என்ன சொன்னீர்கள்? பத்து வருஷத்தில் ஸங்கீதம் பக்குவம், ஆழம் எல்லாம் அடைந்து

---

1. ஸ்ரீ மகாராஜபுரம் 2. ஸ்ரீ செம்மங்குடி 3. ஸ்ரீ மதுரை மணி அய்யர் 4. ஸ்ரீ டைகர் 5. ஸ்ரீ ஜி. என். பி. 6. ஸ்ரீ அரியக்குடி 7. ஸ்ரீ பாலமுரளி கிருஷ்ணா

விட்டதா? என் ஸங்கீதம் எப்பொழுதும் போலத்தான் ஸ்வாமி இருக்கிறது. இந்தப் பத்து வருஷத்தில் நல்ல ஸங்கீதம் கேட்டு நீங்கள் நல்ல ஞானத்தை விருத்தி செய்து கொண்டு விட்டீர்கள்'' என்றார் பாகவதர்.

அன்றிலிருந்து ஒன்று தெரிந்து கொண்டேன். ஒரு பாணியை ஏற்றியும், மற்றொரு பாணியைத் தாழ்த்தியுமோ, வாக்கேயக் காரரின் கீர்த்தனைகளே கீர்த்தனைகள், மற்றவைகள் வெறும் மந்திர தந்திரங்கள் என்று நாவடக்கமில்லாமல் விமரிசிப்பதே ஞான சூனியத்தைக் குறிக்கிறது என்று.

இவ்வளவு பீடிகையும் எதற்கு என்றால், இந்தக் கட்டுரையைப் படித்து, ''இவர் டைகர் விசிறி, அரியக்குடி பக்தன், ஜி.என்.பியின் கிரிடிக் என்றெல்லாம் பேச இடம் கொடுக்கக் கூடாது என்ற அவா. ஸங்கீதம் என்று பேச ஆரம்பித்தால் நம்மையும் அறியாமல் சில பிடிவாத அபிப்பிராயங்கள் நம்மை ஆட்கொண்டு விடுகின்றன. மற்ற பாணிகளில் சில அம்சங்கள் பிடிக்கா விட்டாலும், 'அதில் என்ன இருக்கிறது' என்று அலட்சியம் செய்வது ஸங்கீதத்தை அறிந்து அனுபவிக்க முடியாமல் செய்து விடுகிறது.

எவ்வளவோ வித்வான்கள் பாடி வந்த போதிலும் சில பாகவதர்களின் வழி, வாத்தியக்காரர்களின் விரல் வண்ணம் மட்டுமே தனித்து நிற்பது ஏன்? அவர்கள் வின்யாசத்தில் ஏதோ ஒரு கவர்ச்சி இருக்கிறது. நாதத்தின் ஸகல அம்சங்களையும் ஒரு மனிதனால் கிரகித்துக் கொள்ள முடியாது. ஒவ்வொரு பெரும் வித்வானிடமும் ஒரு சில அம்சங்கள் தான் குடிகொள்கின்றன. இவைதான் அந்தப் பாணியின் மேன்மைக்குக் காரணம்.

கருமேகம் ஒரு சமயம் உலகமே கிடுகிடுக்கும்படி இடிக்கிறது. ஒரு சமயம் மின் வெட்டு கரும் போர்வையைக் கிழித்து எறிகிறது; ஏரி, குளம், கிணறு நிரம்ப ஜோவென்று மழை பெய்கிறது. சில்லென்று காற்று வீசுகிறது. மேகத்தில் அவ்வளவு அடங்கி இருக்கிறது. டைகரின் ஸங்கீதம் இவைகளையெல்லாம் ஒத்திருந்தது. ஸங்கீத ஞானம் படைத்தவன் உள்ளத்தில் அவர் மாதிரி கைகளை அசக்கி, பிருகவுடன் பாடி ஸங்கீதத்தை ரஸிக்க முடியவில்லையே என்று ஏக்கம் விளைவிக்கக் கூடியதாக எனக்குப் படும்.

''இயம் ஸீதா மம சுதா,'' என்று ஜனக மகாராஜா ஒருசில வார்த்தைகளில் ஸீதாவின் கல்யாணத்தை முடித்து விட்டதை வால்மீகி அழகாக வர்ணிக்கிறார். உலகத்துக்கே நன்மை பயக்கக் கூடிய ஒரு பெரும் சம்பவத்தை எவ்வளவு எளிமையாய் வால்மீகி முனி வர்ணித்திருக்கிறார். எல்லோருமே அந்தப் பாணியிலேயே எழுதிவிடலாம் என்று தோன்றும்படியான எளிமை நடை. ஆனால் முடிகிற காரியமா? அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் ''ஸ்ரீ சுப்ரமண்யாய' நமஸ்தே'' ''தாசரதே நீருணமு தீர்ப்ப நாதரமா'' என்ற கீர்த்தனைகளைப் பாடக் கேட்டால் ''நாம்கூடப் பாடிவிடலாம் போல் இருக்கிறதே'' என்று தோன்றும்படி சுலபமாகத் தோன்றும். முடிகிறதா?

இவர்கள் பாணி இப்படி யென்றால் மகா ராஜபுரம் விசுவநாத ஐயர் பாட்டு வஸந்த காலம் போன்றது. எங்கு திரும்பிப் பார்த்தாலும் வண்ண ஜாலங்கள்; ஆஹ்லாதத்துடன் அசைந்தாடும் புஷ்பக் குவியல்கள். மணம் கமழும் சோலை. ஒரு பிர்க்கா விர்ரென்று கிளம்பி புஷ்பத்தை வளைத்துப் பறந்து வண்டுபோல் ஒரு வட்டம் அடித்து மேல் ஷட்ஜத்திலோ, காந்தாரத்திலோ கார்வையாய் நிற்கும்பொழுது தேனை உறிஞ்சும் வண்டின் போதை அவர் ஸங்கீதம் கொடுத்தது. அனுபவிக்க முடிந்தது; விவரிக்க முடியாதது.

உவமை காட்டிக் கொண்டே விவரித்துக் கொண்டு போனால் சலிப்புத் தட்டி விடும். எதற்காக இரண்டு மூன்று பாணிகளைச் சொன்னேன் என்றால், ஒவ்வொரு ரஸிகனுடைய மனப் பக்குவத்துக்குத் தகுந்தபடி பெரிய வித்வான்களுடைய கலை அம்சம் கற்பனை அலைகளை எழுப்பி விடுகின்றன. காளிதாஸனுடைய கற்பனையுடன் பார்த்தால் மேகமும் கவி பாடும். ''க்ஷீணமை'' என்று செம்மங்குடி சீனிவாச ஐயர் ஆரம்பித்தால் உள்ளத்தில் ஒருவித உத்ஸாகம்; அதே அவர் ''அம்ப காமாக்ஷி'' என்ற ஸ்வர ஜதியைத் தொடங்கினால் உள்ளத்தில் ஓர் அலாதி அமைதி. இப்படிப்பட்ட நுணுக்கப் பாகுபாடு செய்யும் போது வித்துவான்கள் ''பாணி'' என்ற பிருது பாட்டை ஒட்டிக் கொள்கிறது. ஒரு பாணியின் கவர்ச்சிக்கு அத்தாட்சி பின்னால் வரும் வித்வான்கள் அவரைப் போல் குரல், அங்க கோணல்களுடன் பாட முயற்சி செய்வது. சிலசமயம் ஓரிரு இடங்களில் பிரதிபலிக்க முடிகிறது. ஜி. என். பி.யின் பாணி அதற்குச் சான்று. பள பளவென்று டாலடிக்கும் வைரம் போல், பொல பொலவென்று மின் வேகத்தில் உதிரும் ஸங்கதிகளும், விறுவிறுப்பும் புது மோஸ்தர் ராக விளக்கங்களும் அவர் பாட்டின் மெருகூட்டும் அம்சங்கள். ஸ்வர ஜாலங்கள், ஜண்டை கோர்வைகள், கம்பீர ஸ்ருதியுடன் கூடிய கார்வை நிரம்பிய மதுரை மணி ஐயர் பாணி ரஸிகர்களின் தலைகளை ஸ்வரப்ரஸ்தாரத்துக்குத் தக்கபடி ஆட்டிவைத்த ஸங்கீதம். லய வின்யாசங்களைப் பலாப் பழத்தை நறுக்கி விண்டு சுளை சுளையாய் வழங்கினவர்கள் ஆலத்தூர் சகோதரர்கள். இப்பொழுது பாலமுரளி கிருஷ்ண பனிபோல் மென்மை பாணியைப் பிரபலமாக்கிக்கொண்டு வருகிறார். இதை விட்டால் இன்னிசையை இறைவன் வழிபாட்டுக்குத் திருப்பினால் எந் நாட்டிலும் மனித இதயத்தை நாதத்தின் மகிமையைப் புரிந்துகொள்ளச் செய்ய முடியும் என்று எம். எஸ். சுப்புலக்ஷ்மி செய்து வருகிறார். விச்ராந்தி ஸங்கீதம் என்றால் டி. கே. பட்டம்மாள்.

இப்படி சமீப காலத்தில் பல பாணிகளை நாம் கேட்டும் ஆனந்தித்தும் வந்திருக்கிறோம். இன்னும் பெரிய பெரிய மகா வித்துவான்கள் இவர்களுக்கு முன் தோன்றி அதிசயிக்கத் தக்க ''பாணி'' விளக்கங்கள் தந்திருப்பதாக எழுபது என்பது வயதடைந்தவர்கள் சொல்லக் கேட்கிறோம். அப்படிப் பட்ட பாட்டை அனுபவிக்க நமக்குப் பாக்கியம் இல்லை. விஞ்ஞானத்தின் மகிமையினால் வரும் சந்ததியினருக்கு அந்தத் துர்ப் பாக்கியம் ஏற்படாது. நல்லதோ கெட்டதோ எதுவும் தங்கு தடையின்றி உலவி வரும்.

# ஒலி பெருக்குவதும் ஒரு கலையே!




ஓர் இசை நிகழ்ச்சி சிறப்பாக அமைய, பாடுபவரின் சாரீரம் அன்று சுகமாக இருக்க வேண்டும்; பக்க வாத்தியக்காரர்களின் பூரண ஒத்துழைப்புக் கிட்ட வேண்டும்; இசை ஞானம் மிக்க ரசிகர்களின் ஆதரவும் வேண்டும்; இவற்றுடன் ஒலிபெருக்கியின் பூரண ஒத்துழைப்பும் வேண்டும்!

அசோசியேடெட் ரேடியோ ஏஜன்ஸிஸ் (ஏ.ஆர்.ஏ.) எனும் ஒலிபெருக்கி நிறுவனத்தைச் சார்ந்த திரு. நாராயணன் ''கர்நாடக சங்கீதத்தில் நிரம்ப ஆர்வம் இருந்தால்தான் இசை நிகழ்ச்சிகளில் சோபிக்கும் வகையில் ஒலி பெருக்கி அமைக்க முடியும்'' என்கிறார். ''சங்கீதக் கச்சேரிக்கு 'மைக்' வைப்பவர் ஒரு நிமிடம் கூட அரங்கை விட்டு வெளியே செல்லக் கூடாது. திடீரென்று ஒலிபெருக்கிக் கருவி மின்சாரக் கோளாறு காரணமாக 'விசில்' அடிக்க ஆரம்பித்து விடும். மேடைப் பிரசங்கமாக இருந்தால் அதிகமாகப் பாதித்துவிடாது. கச்சேரியில் இந்த 'விசில்' சப்தம் வந்தால் ரசிகர்களுக்கு நாராசமாக இருக்கும். பாடகரின் உற்சாகமும் குன்றி விடும். எனவே ஒலிபெருக்கி அமைப்பவர் கச்சேரி முடியும் வரை அருகிலேயே இருக்க வேண்டும். என்னைப் பொறுத்த வரை நான் அங்கேயே உட்கார்ந்து கச்சேரியை மெய் மறந்து ரசித்துக் கொண்டிருப்பேன்'' என்கிறார் நாராயணன்.

ஜி. என். பி. இவரிடம் 'அந்த மைசூர்பாகு கொண்டு வந்திருக்கிறீர்களா?' என்று கேட்பாராம். அவர் குறிப்பிட்டது அந்தக் காலத்தில் புழக்கத்திலிருந்த பெரிய நீண்ட சதுரமான ஒலிபெருக்கிக் கருவியைத்தான். அந்தக் கருவி பாடகரின் முகத்தையே மறைக்கிறது என்று ஸ்ரீ டி. டி. கே. ஆட்சேபித்து வந்தார். ''அவர் வற்புறுத்திய பிறகுதான் இன்று புழக்கத்திலுள்ள சிறிய 'பென்சில்' மைக் கருவியை உபயோகிக்க ஆரம்பித்தோம்'' என்கிறார் நாராயணன்.

அவர் தொடர்ந்துகூறுகிறார்: ''ஒலிபெருக்கி அமைப்பாளருக்குப் பாடகரின் குரல் நயம் பற்றித் தெரிந்திருக்க வேண்டும். வாய்ப்பாட்டுக் காரரை விட வயலினுக்கு ஒலி சற்றுக் குறைவாக இருத்தல் வேண்டும். முதன்முதலில் வயலினுக்குத் 'தனி' மைக் வைத்ததில் எங்கள் நிறுவன நிருவாகி திரு. செல்லையாவுக்கு முக்கிய பங்கு உண்டு. கச்சேரி நடந்து கொண்டிருக்கும் போதே வயலின் மைக்கின் ஒலியைச் சற்றுக் கூடுதலாக்கும்படி வயலின் வித்வான் விரும்புவார் — தம் வாசிப்பு தனிச் சிறப்புடன் இருக்க வேண்டும் என்ற ஆசையில். அதற்கு இசைவது போல் 'பாவனை'யாக ஆம்ப்ளிஃபையரில் ஏதாவது பித்தானைத் திருகுவேன். உண்மையில் எந்த மாறுதலும் நிகழ்ந்திராது. எனினும், வயலின் வித்வானுக்கு ஓரளவு திருப்தி ஏற்பட்டு விடும். பாடகரின் குரலும் பாதிக்கப்படாது.

''இரு பாடகிகள், அல்லது பாடகர்கள் சேர்ந்து கச்சேரி செய்யும்போது ஒருவரது குரல் சன்னமாகவும் மற்றவரின் சாரீரம் கம்பீரமாகவும் இருந்தால் ஒலி அமைப்பில் விசேஷ கவனம் தேவைப்படும். ரசிகர்களுக்குத் திருப்தி அளிக்கும் வகையில் இரு குரல்களும் இழையும் வகையில் ஒலி அமைப்பைச் செய்ய வேண்டும். சன்னமான குரலுக்கு 'வால்யூம்' சற்றுக் கூடுதலாக வைப்பேன்.

''பாடகர்களில் சிலருக்கு 'மைக் ஸென்ஸ்' உண்டு. குரலை உயர்த்திப் பாடும் போது சற்றுப் பின் வாங்கியும் குரலைத் தாழ்த்தும் போது மைக் அருகில் நெருங்கி வந்தும் பாடினால் மிக இனிமையாக இருக்கும். அப்படி அனுசரித்துக் கொள்வது பாடகர்களுக்கு இயல்பாகவே வரும். எம்.எல்.வி., எம்.எஸ்., பாலமுரளி — இவர்களை உதாரணமாகக் குறிப்பிடலாம்'' என்கிறார் நாராயணன்.

''இத்துறையில், நடுக் கச்சேரியில் உங்களுக்கு எதிர்பாராத சோதனை ஏதாவது ஏற்பட்டதுண்டா?''

''ஒருசமயம் கிருஷ்ண கான சபாவில் செம்மங்குடி சீனிவாசய்யர் பாடிக் கொண்டிருந்த போது வயலின் மைக் பழுதுபட்டு விட்டது. மயிலாப்பூருக்குச் சென்று வேறு மைக் எடுத்துக் கொண்டு தியாகராய நகருக்கு வர வேண்டும். டாக்ஸியில் போய் எடுத்து வரக் கொஞ்சம் நேரமாகுமே? செம்மங்குடி அவர்கள் அந்த நிலைமையில் எனக்குக் கைகொடுத்து உதவியதை என்னால் மறக்க முடியாது. 'வயலின் மைக் வந்து சேரும் வரையில் நான் ராகம் பாடிக் கொண்டிருக்கிறேன்' என்று கூறிவிட்டு அவ்விதமே மைக் வரும் வரை விஸ்தாரமாக ராக ஆலாபனை செய்தார்'' என்கிறார் இத்துறையில் வெள்ளி விழாக் கொண்டாடி விட்ட நாராயணன்.

— பேட்டி: ஆர். பி.

# பொன்னியின்

## 11. பாட்டுத் திறம்

துள்ளிக் களிக்கும் - அழகை
அள்ளிக் கொழிக்கும்
உள்ளம் உருக்கும் - பக்தி
வெள்ளம் பெருக்கும்.

**''வே**லன் பாட்டு'' என்ற கவிதை ஒன்று, 1942ல் வெளியான கல்கியின் முதலாவது தீபாவளி மலரில், இயற்றியவரின் பெயர் இன்றி இடம் பெற்றிருந்தது. அந்தப் பாடலை, அம்மலர் பற்றிய விரிவான பாராட்டுக் கடிதம் ஒன்றில் ரசிகமணி டி. கே. சி. சிறப்பாகக் குறிப்பிட்டு, ''புதிதாய் ஒரு பாட்டுக் கிடைத்துவிட்டது!'' எனக் கொண்டாடியிருந்தார். அத்துடன், ''யாருடைய பாடல் அது?'' என்றும் கேட்டிருந்தார். அவருடைய கடிதம் நவம்பர் 20ம் தேதிய கல்கி இதழில் வெளியாயிற்று; ஆனால் அவருடைய கேள்விக்குப் பதில் இல்லை.

எவ்வளவு புகழ் மிக்க கவிஞர் புனைந்த கவிதையாய் இருந்தாலும் சரி, தமக்கு எவ்வளவோ வேண்டியவர் ஒருவர் இயற்றிய பாடலாய் இருந்தாலும் சரி, மாற்றுக் கம்மியாய் இருந்தால், வெறும் பித்தளை என்று தள்ளி விடுவார் டி. கே. சி. அப்படிப்பட்டவர் மெச்சிய காரணத்தால், முன்பு படிக்காமல் விட்டவர்கள் எல்லாம் அந்த வேலன் பாட்டைத் தேடிப்படித்தார்கள்; ஏற்கனவே படித்தவர்கள் மீண்டும் அதைப் படித்து, அதன் நயங்களை மேலும் நன்றாக அனுபவித்தார்கள்.

''யாருடைய பாடல் அது?'' என்பதற்கான விடை, உடனேயே டி.கே.சிக்கு ஒரு பதில் — கடிதத்தின் மூலம் கிடைத்துவிட்டது. ஆனால் அவர் அதை இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகுதான், சரியான சமயம் ஒன்றில் பகிரங்கமாய் அறிவித்தார்.

அந்த வேலன் பாட்டு, அதன் முதல் அடிச் சொற்களான ''மாலைப் பொழுதினிலே'' என்ற பெயருடன், ஓர் இசைத் தட்டாகப் பதிவாகி வெளியாயிற்று. எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இனிய குரலில் வெளியான அந்த இசைத் தட்டுக்கு, டி.கே.சி.யே விரிவாக விமரிசனம் எழுதினார். எம்.எஸ்ஸின் குரலில் ஒலித்த அந்தப் பாட்டைத் தமிழர்களுக்கு வாய்த்த 'இன்னொரு யோகம்' என்றார். முதல் யோகம் என்ன என்பதை, அந்த விமரிசனத்தின் முன்பகுதியில் தெரிவித்தார் :

ஒரு பாஷைக்கு உரிய செல்வம் கவிதான். இது விஷயமாக அதிகமாய்ப் பேரம் பண்ண வேண்டிய அவசியம் இல்லை.

கவி ஒன்று கிடைத்து விட்டால் அதற்காகவே ஒரு விழா கொண்டாடலாம். கவி என்கிற வஸ்து அவ்வளவு அபூர்வமானது— அப்படி லகுவாய்க் கிடைக்கிற காரியம் அல்ல

# புதல்வர்



சுந்தா

—என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேணும்.

1942ம் வருஷத்துக் கல்கி தீபாவளி மலர் கைக்கு வந்தது. அதில் ஒரு கவி. எளிமையோடும் உணர்ச்சியோடும் உண்மையோடுமே வாய்த்திருந்தது அது. பல தடவை பாடிப் பாடி அனுபவித்தேன். நண்பர்களுக்கும் பாடிக் காட்டினேன். எல்லோரும் அனுபவித்தார்கள். தமிழுக்கு ஒரு கவி புதிதாய்க் கிடைத்து விட்டதே என்று வியந்தோம். பெருமை அடித்துக் கொண்டோம்... செய்யுள்கள் ஐந்து. ஐந்தும் பஞ்சரத்தினங்கள் தான். தமிழ்ப் பண்பு, கவிப் பண்பு, சமயப் பண்பு எல்லாம் அழகாய் உருவெடுத்து விட்டன கவியில். மதுரமான சின்னஞ் சிறு ஓடை, மலையில் பாறைகளுக்கிடையேயும், சோலைகளுக்கிடையேயும் ஓடியும் ஆடியும் திகைத்தும், பம்மியும் போவதைப் பார்க்கிறோம். அப்படி ஓடுகிறது விஷயம், பாடல்களின் இன்னிசை இடையே. ஆம்; ரொம்ப ரொம்ப அனுபவித்தோம். ஆனால் ஆசிரியர் யார் என்று தெரியவில்லை. தீபாவளி மலரில் பெயர் போடவில்லை.

கவிஞர் தேசிகவிநாயகம் பிள்ளை அல்ல என்பதைக் கடிதம் எழுதித் தெரிந்துகொண்டேன். பிறகு கல்கி ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தியே கவிக்கும் ஆசிரியர் என்று தெரிய வந்தது. (கல்கி 15—4—45)

இவ்வாறு கல்கியின் பாட்டுத் திறத்துக்கு ரசிகமணியின் தர முத்திரை கிடைத்துவிட்டது; இனிமேல் அவர் தமது பாடல்களைத் தைரியமாகத் தமது பெயருடனேயே வெளியிடலாந் தான். ஆனாலும் அப்படிச் செய்யவில்லை அவர். பின்னர் வந்த தீபாவளி மலர்களிலும் வேறு சிறப்பு மலர்களிலும், தமது பாடல்களை முன் போலவே தான் ''அநாமதேயமாய்'' வெளியிட்டு வந்தார். அவர் காலமான ஆண்டுக்கு அடுத்த இரண்டு தீபாவளி மலர்களில் தான், அவருடைய பெயருடன் இரு பாடல்கள் பிரசுரமாயின.

அப்பாடல்களை வெளியிட்டவர், அப்போது கல்கிப் பத்திரிகையின் ஆசிரியராய் இருந்த மீ. ப. சோமு. நேர்த்தியான கவியாற்றல் கொண்டவரும், சில கவிதைகளுக்கு டி. கே. சி.யின் தர முத்திரையைப் பெற்றவருமான அவர், ''கல்கியின் பாடல்கள்'' பற்றிப் பின்னர் தனியொரு கட்டுரை எழுதினார். 1967ல், தில்லித் தமிழ்ச் சங்கத்தின் ''சுடர்'' கல்கி மலரில் வெளியான அக்கட்டுரையில், மூன்று பாடல்களின் நயங்களை வரி வரியாய்ச் சோமு ஆராய்ந்தெடுத்துச் சொல்லியிருக்கிறார். ''கல்கி அவர்களின் சொல்லும், அவருடைய இதயத்திலே உள்ள இசையும் இணைந்து செய்கிற விந்தை அது!'' என்று, அதில் ஓரிடத்தில் அவர் குறிப்பிட்டுள்ளார். அந்த விந்தையைப் புலப்படுத்தும் வரிகள், ''காற்றினிலே வரும் கீதம்'' என்று தொடங்கும் பாடலில் வருவன:







○ கல்கியின் கையெழுத்தில் அவர் எழுதிய பாடல் ஒன்று.

○ கல்கியின் பாடல்களை இசைத்தட்டிலே பதிவித்துள்ள ஸ்ரீமதி எம். எஸ்., ஸ்ரீமதி டி. கே. பி., ஸ்ரீமதி எம். எல். வி.

நிலா மலர்ந்த இரவினில் தென்றல்
உலாவிடும் நதியில்
நீல நிறத்துப் பாலகன் ஒருவன்
குழல் ஊதி நின்றான்
காலமெல்லாம் அவன் காதலை எண்ணி
உருகுமோ என் உள்ளம்—
காற்றினிலே வரும் கீதம்

இந்தக் 'காற்றினிலே வரும் கீதம்' மீரா திரைப்படத்துக்கென கல்கி இயற்றி மீராவாக எம். எஸ். பாடிய ஆறு கீதங்களில் ஒன்று. அந்தப் படத்தில் ஒலித்த மற்றப் பாடல்கள் பாபநாசம் சிவனின் கவனம். இருவரின் பாடல்களும் சேர்ந்து, ''மீரா பாட்டுக்கள்'' என்ற பொதுப் பெயரில், இசைத் தட்டுக்களில் பதிவாகியுள்ளன. அன்று போல் இன்றும் அவை காற்றினிலே வரும் கீதமாய் நெடுகிலும் ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

மீரா இசைத் தட்டுக்கள் பற்றிய விமரிசனம் ஒன்று, 17—2—46 தேதிய கல்கி இதழில் வந்தது. பெயர் போடாமல் கல்கி ஆசிரியரே எழுதியதான அதில், இசையின் சிறப்பு பற்றியும், எம்.எஸ்ஸின் இசைப் பெருமை பற்றியும் ஒரு பொது முன்னுரை இருந்தது. இசையோடு இசைந்த கல்கியின் இலக்கிய நடைக்கு அது மற்றும் ஓர் உதாரணம் :

இளந் தென்றல் இனியது; புது மலரின் நறுமணம் இனியது; நிர்மலமான நீரோடை இனியது; நீல வானத்தில் சுடர் விட்டு ஒளிரும் நட்சத்திரங்கள் மிகவும் இனியன.

இம்மாதிரி எத்தனையோ இன்பங்களை இறைவன் நமக்காக அளித்திருக்கிறார். இந்த உலக வாழ்க்கையில் சாதாரணமாக ஏற்படும் துன்பங்களை யெல்லாம் மறக்கச் செய்யும் படியான அநேக இன்பங்களை இயற்கையில் நிறைத்து வைத்திருக்கிறார்...

இறைவன் மனித குலத்துக்காக அளித்திருக்கும் இன்பங்களுக்குள்ளே சங்கீத இன்பம் மிகவும் மேன்மையானது. சங்கீதம் உயர்ந்ததாயும், உணர்ச்சியோடு கலந்ததாயும் அமைந்து விட்டால், அதில் ஏற்படும் ஆனந்தம் ஏறக்குறைய ஒரு போதையாகி ரஸிகர்களை மெய்மறக்கச் செய்துவிடுகிறது. ஆனால் அத்தகைய சங்கீத ஆனந்தத்தை அனுபவிப்பதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்; அதற்குரிய பண்பாடும் ரசிகத் தன்மையும் வேண்டும்.

''எனக்குச் சங்கீத ஞானம் கிடையாது; ஆனாலும் உங்களுடைய குரலும் கானமும் மிகவும் மதுரமாய் இருக்கின்றன'' என்று காந்தி மகாத்மா ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாடிய கீதங்களைக் கேட்டுவிட்டு மனமுவந்து ஆசீர்வதித்தார்..

''சங்கீத ஞானம்'' என்று மகாத்மா குறிப்பிட்டது. சங்கீதக் கலையின் முக்கிய அம்சங்களான ராகம், தாளம் முதலிய வேறுபாடுகளையும் ஸ்வர பேத நுட்பங்களையும் தெரிந்து கொள்ளும் ஆற்றல். இத்தகைய சங்கீத ஞானம் எல்லாருக்கும் இருப்பதில்லை. இருக்க வேண்டிய அவசியமும் இல்லை. ஆனால், நல்ல சங்கீதத்தைப் பொதுப்படையாகக் கேட்டு அநுபவிக்கும் சக்தி எல்லோருக்கும் அவசியம் வேண்டும்....

தமிழ் நாட்டில் உள்ள நாம் சங்கீதத்தை அனுபவிக்கும் விஷயத்தில் ரொம்பவும் கொடுத்து வைத்தவர்கள். நல்ல சங்கீதத்தை நம்மால் அனுபவிக்க முடியும். அதோடு, நல்ல சங்கீதம் நமக்குச் சுலபமாகக் கிடைக்கவும் செய்கிறது. அகில இந்தியாவுக்குள்ளேயும் இந்த ஒரு விஷயத்தில் தமிழர்கள் நிச்சயமாகப் பாக்கியசாலிகள்; ஒப்பற்ற பாக்கியசாலிகள். அந்தப் பாக்கியம் எவ்வளவு விசேஷமானது என்பது மீரா இசைத்தட்டு கீதங்களைக் கேட்டுப் பார்த்தால் தெரிய வரும்.

மீரா பக்திப் பாடல்களுக்கு முன்னால் பரவிய கல்கியின் திரைப் பாடல்கள், ''தியாக பூமி'' படத்தின் தேசபக்திப் பாடல்களாகும். டி. கே. பட்டம்மாள் இசைத்தளித்த அப்பாடல்கள், அக்காலத்தில் பாரதியாரின் தேசிய கீதங்களுடன் கலந்து, நாவுக்கு நாவு தாவி எத்தனையோ நெஞ்சங்களில் நாட்டுப் பற்றையும் விடுதலை வேட்கையையும் பெருக்கின.

மற்றும், டி. கே. பட்டம்மாள் கச்சேரிகளில் பாடுவதற்காகக் கல்கி இயற்றிக் கொடுத்த நாலு பாடல்கள், பின்னர் இசைத் தட்டுக்களிலும் பதிவாகிப் பிரபலம் அடைந்தன. அவற்றில் ஒன்றிரண்டையாவது ஒவ்வொரு கச்சேரியிலும் அவர் பாடாமல் தீராது என்றாயிற்று. ''பூங்குயில் கூவும் பூஞ்சோலையில்'' என்ற பாடல், அவருடைய கச்சேரிகளில், ஆங்கிலத்தில் சொல்வது போல் ஒரு ''மஸ்ட்'' என்பதாக இருந்தது. அதன் காரணமாய்ப் 'பூங்குயில் பட்டம்மாள்' என்று அவரைச் சிலர் அக்காலத்தில் குறிப்பிட்டார்கள்.

இன்னொரு இசைக் குயில், எம்.எல். வசந்தகுமாரி, ''மாயம் வல்லவன் கண்ணன்'' என்ற ஒரு பாடலை இசைத் தட்டில் பதித்திருக்கிறார். நெடுங்காலம் பலரும் விரும்பிக் கேட்ட அது, கல்கியின் பாட்டு என்பது ஒரு சிலருக்கே தெரிந்திருக்கக் கூடும். (பாடல் ஆசிரியர் என்பதாக அச்சிலே எப்படிக் கல்கியின் பெயர் வெளியானதில்லையோ, அதேபோல இசைத்தட்டுக்களிலும் வெளியானதில்லை.)

---

**சோடா**

சோடா முதன் முதலாக 1812ம் ஆண்டு மார்ச் மாதம் 19ந் தேதி கல்கத்தாவில் விற்பனை செய்யப்பட்டது. அதைப்பற்றிப் பத்திரிகையில் பெரிய விளம்பரங்கள் வெளியாகின. இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட சரக்கு!

— ஸ்டேட்ஸ்மென் - கே.ஆர்.



'உடல் இளைக்க நினைப்பவர்களின் காலை உணவு' என்று ஒரு பாக்கெட் விற்கப்பட்டது. வாங்கிப் பார்த்ததில் அது காலி பாக்கெட் என்று தெரிந்தது!

—விக்னேஷ் - பாலி

---

கல்கியின் எந்தப் பாட்டிலும் சரி, பாரதியார் கவிதையின் அளாவலைப் பொருளிலும் நடைப் போக்கிலும் காணலாம். தொடக்கத்தில் குறிப்பிட்ட கடிதத்தில், டி. கே. சி. மேலும் சொன்னது போல், ''பாரதியார் பாட்டின் உள்ளான கவி ரஸத்தை நன்றாய்ப் பார்த்துப் பார்த்து அனுபவித்திருந்தால் ஒழிய இந்த மாதிரி பாட வராது.''

கல்கியின் மனத்தில் நிறைந்திருந்த பாரதி — பக்தியானது, அக்கவிஞருக்கு அவர் எட்டயபுரத்தில் புகழ் ஆலயம் எழுப்பிக் கொண்டிருக்கையில் அற்புதமாய்ப் பாட்டுருக் கொண்டது. ''தவமும் பலித்ததம்மா'' என்ற கீர்த்தனையும் ''தெய்வத் தமிழ் நாட்டினிலே'' என்ற வெண்ணிலாக் கண்ணிகளும், பாரதியாரின் மகிமையை அவருடைய கவிப் பாணியிலேயே பாடிப் பரவின. அவற்றைக் கீதாஞ்சலி மாலைகளாய் எம். எஸ். தொகுத்துப் பரிமளிக்கச் செய்தார்.

அவற்றுக்குப் பிறகு அதே இசைக் குரலில் பதிவாகிப் பரவிய கல்கியின் பாடல்கள், மகாத்மா காந்தியின் மறைவினால் உண்டான ஆறாத் துயரத்திலிருந்து எழுந்தவை. அவற்றில் ஒன்று, ''மாநிலத்தை வாழ வைக்க வந்த மகாத்மா'' வானுலகை அணுகியபோது என்னென்ன நிகழ்ந்திருக்கும் என்பதை வர்ணிக்கிறது; இன்னொன்று, ''இத்தனை நாள் ஆனபின்னும் ஏழை நெஞ்சே ஏன் துயரம்?'' என வினவுகிறது. அடுத்து அந்த வினாவுக்குத் ''தன்னுயிரை மன்னுயிர்க்கே தந்தவர்தான் மாய்ந்தவரோ?'' என மற்றொரு வினாவின்மூலம் விடையும் ஆறுதலும் அளிக்கிறது.

இவ்வாறு இசைத்தட்டுக்களில் பதிவானவை தவிர, கல்கியின் நாவல்கள் சிலவற்றிலும் அவருடைய பாடல்கள் பொதிந்துள்ளன.

''கள்வனின் காதலி'' நாவலில் நடக்கும் ''சங்கீத சதாரம்'' நாடகத்தில், திருடன் வேடத்தின் முத்தையன் பாடும் ''கண்ணே உனக்குப் பயம் ஏனோ?'' என்பது கல்கியின் பாட்டே. ஆனால் அதற்கு முன்னால் 36ம் அத்தியாயத்தில் அபிராமி பாடுவதாய் உள்ள குயில் பாட்டு, யாருடைய கவனம் என்பது பற்றிச் சந்தேகம் எழுந்துள்ளதால், அதைக் கல்கியின் பாடலாய்க் கொள்ள வேண்டியதில்லை.

''சோலைமலை இளவரசி'' குறு நாவலில், கதாநாயகி மீது கதாநாயகன் இட்டுக்கட்டிப் பாடும் ''பொன்னம்மாள் ரொம்பப் பொல்லாதவள்'' என்ற பாடல் கதாசிரியரே இட்டுக் கட்டியதாகும்.

''சிவகாமியின் சபதம்'' நாவலின் ஒரு கட்டத்தில் தமது இலக்கிய ஆற்றலை எல்லாம் கொண்டு படைத்த கதை —அணங்கை, பொருத்தமாய்த் தாம் புனைந்த பாடல் ஒன்றுக்கே ஆடச் செய்திருக்கிறார் கல்கி. காஞ்சி நகரின் பிரதான சபா மண்டபத்தில், வாதாபிச் சக்கரவர்த்திக்கு மகேந்திர பல்லவர் பிரிவுபசாரம் நடத்தும் கட்டம் அது—

அன்று அபிநயத்துக்குச் சிவகாமி முதன் முதலாக எடுத்துக் கொண்ட பாடல், செந்தமிழ் நாட்டின் அதி தேவதையான வேலனைப் பற்றியது. இந்தக் காலத்தில் 'ஆனந்த பைரவி' என்று வழங்கும் பழைமையான ராகத்தில் நடனத்துக்கும் அபிநயத்துக்கும் ஏற்ற தாளத்துடன் அமைந்த அப்பாடல் பின்வருமாறு:

மறவேன் மறவேன் என்று
வேலின்மேல் ஆணையிட்ட
மன்னரும் மறப்பாரோ
—நீல மயிலே!

உருகி உருகி உள்ளம்
அவரை நினைவதையும்
உயிரும் கரைவதையும்
—அறியாரோ மயிலே?..

என்று சிவகாமி பாடிக்கொண்டு அபிநயம் பிடித்தபோது, சபையோரின் கண் முன்னிருந்த சிவகாமி மறைந்து விட்டாள்.... ஸ்ரீ சுப்பிரமணியர், கையில் வேலுடனே அவர்கள் கண் முன்னால் நின்றார். கருணையும் அன்பும் ததும்பிய கண்களினால் முருகப் பெருமான், தன்னிடம் காதல் கொண்ட பெண்ணை நோக்குவதையும், கையில் பிடித்த வேலின்மேல் ஆணை வைப்பதையும், 'உன்னை என்றும் மறவேன்!' என்று உறுதி கூறுவதையும், சபையோர் பிரத்தியட்சமாய்க் கண்டார்கள். அடுத்த கணத்தில் வேலனும் வேலும் மறைய வேலனைப் பிரிந்த காதலியையும் நீல மயிலையும் சபையோர் தங்கள் எதிரே பார்த்தார்கள். காதலியின் உயிர், வேலனைப் பிரிந்திருக்கும் ஆற்றாமையினால் உருகிக் கரைவதையும் அவர்கள் கண்டார்கள்.

(பாகம் 3, அத். 14 - 15)

சிவகாமியின் ஆடலுக்கு ஒரு பாடல் இயற்றிக் கொடுத்ததோடு அல்லாமல், இரண்டுக்கும் சேர்த்து ஒரு பொருள் விளக்கமும் கொடுத்து விட்டார் கல்கி!

சிவகாமியை அடுத்து வேறு யாரைத் தமது பாடல் ஒன்றைப் பாடச் செய்யலாம் என்று காத்திருந்த **கவிஞர் கல்கி**

(இப்படிச் சொன்னால் நன்றாய்த்தான் இருக்கிறது!) ''பொன்னியின் செல்வன்'' நாவலை எழுதுகையில், பூங்குழலியைத் தேர்ந்தெடுத்தார்.

காட்சி — கோடிக்கரை; காலம் — அந்தி நேரம்:

பூங்குழலி படகில் ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டு பாடினாள். அவளுடைய கானத்தைக் கேட்பதற்காகவே கடலும் அலை அடங்கி ஒய்ந்திருந்தது போலும்! அதற்காகவே காற்றும் வீசி அடிக்காமல் மெள்ள மெள்ளத் தவழ்ந்து வந்தது போலும்! தூரத்தில் தெரிந்த காட்டு மரங்களும் இலை அசையாமல் நின்று அவளுடைய கானத்தைக் கவனமாய்க் கேட்டன போலும்!...

அலைகடலும் ஒய்ந்திருக்க
அகக் கடல்தான் பொங்குவதேன்?
நிலமகளும் துயிலுகையில்
நெஞ்சகந்தான் பதைப்பதுமேன்?...
(பாகம் 2 அத் 1)

பாட்டு மேலே தொடர்கிறது. மொத்தத்தில் இப்பாடலின் இலக்கியத் தரம் எப்படி இருந்த போதிலும், இந்த இரண்டு வரிகளும், இதே சொற்களிலும் வடிவிலும் இல்லா விட்டாலும் இதே உணர்ச்சியுடனும், பொருளுடனும், பாலப் பருவத்திலிருந்தே கல்கியின் இதயத்தில் ஓர் ஏக்கப் பல்லவியாய் அவ்வப்போது சுழன்று வந்துள்ளன எனலாம்.

இந்த நாவலிலும் வேறு நாவல்களிலும் கல்கியின் பாடல்கள் மேலும் சில உள்ளன. அவருடைய பாடல்கள் எல்லாவற்றையும் இசைத்தட்டுக்களிலிருந்தும், நூல்களிலிருந்தும், ஆனந்தியும், ராஜேந்திரனும் பெயர்த்து எழுதி ஒரு தொகுப்பாய் வைத்திருக்கிறார்கள். புத்தகமாய் வெளிவரத் தக்கதே இந்தத் தொகுப்பு. இதில் மொத்தம் உள்ள முப்பத்தைந்து பாடல்களில் பாதிக்காவது டி. கே. சி. தர முத்திரை அளித்திருப்பார்.

கல்கியின் பாடல் புத்தகம் ஒன்று வெளிவருகிற வரை, இசைத்தட்டுக்களில் உள்ள அவருடைய பாட்டுக்கள் என்னென்ன என்பதை இனம் கண்டு கொள்ள உதவும், இந்தப் பட்டியல்:

**எம்.எஸ். சுப்புலக்ஷ்மி இசைத்தவை:**

கண்டதுண்டோ கண்ணன் போல் — புவியில்
கண்டதுண்டோ கண்ணன் போல்

வண்டாடும் சோலை தனிலே
கண்டேனதுளம் கொண்டான் சகியே

மாலைப் பொழுதினிலே — ஒரு நாள்
மலர்ப் பொழுதினிலே

தவமும் பலித்ததம்மா — நமது
தாயின் விலங்குகள் தெறித்து விழுந்தன

தெய்வத் தமிழ்நாட்டினிலே—வெண்ணிலாவே
தீரமின்றிப் பேதையராய் வாழ்ந்திருந்தோம்

மாநிலத்தை வாழ வைக்க வந்த மகாத்மா
மாந்தர் குலம் உயர்ந்திடவே வந்த மகாத்மா

இத்தனை நாள் ஆன பின்னும்
ஏழை நெஞ்சே ஏன் துயரம்

(மீரா படத்தில்)

சராசரம் உன்னை யாவும் தேடுமே
மறைகளும் மகிழ்ந்துன்னைப் பாடுமே

பிருந்தா வனத்தில் கண்ணன் வளர்ந்த
அந்த நாளும் வந்திடாதோ

உடல் உருக உளம் உருக
ஊனெல்லாம் நெக்குருக

காற்றினிலே வரும் கீதம்
கண்கள் பனித்திடப் பொங்கும் கீதம்

மறவேனே என்னாளிலுமே
கிரிதாரி உனதருளே

லீலைகள் செய்வானே — கண்ணன்
மாயைகள் புரிவானே

**டி. கே. பட்டம்மாள் இசைத்தவை:**

குழலோசை கேட்டாயோ கிளியே

பூங்குயில் கூவும் பூஞ்சோலையில் ஒருநாள்
மாமயில் மீது மாயமாய் வந்தான்

திரைகடல் தூங்காதோ — அலை ஓயாதோ

இன்பக் கனவொன்று துயிலினில் கண்டேன்
சகி — அந்த
நினைவினில் பரவசம் கொண்டேன் சகி.

(தியாக பூமி படத்தில்)

பாரத புண்ணிய பூமி — ஜெய
பாரத புண்ணிய பூமி

பந்தம் அகன்று நம் திருநாடு
உய்ந்திட வேண்டாமோ

தேச சேவை செய்ய வாரீர் — விரைவாய்
தேச சேவை செய்ய வாரீர்

**எம். எல். வசந்தகுமாரி இசைத்தது:**

மாயம் வல்லவன் கண்ணன் என்று — என்
தாயும் அன்றே சொன்னதுண்டு

இந்தப் பாடல்களின் மூலம், நல்ல இசைத் தமிழ் மேலும் பரவுவதற்கு கல்கி ஓரளவு வகை செய்தார் எனலாம்.

---



1975ம் ஆண்டு அகில உலகப் பெண்கள் ஆண்டாகக் கொண்டாடப் பட்டு விட்டது. ஆகவே 1976ம் ஆண்டை அகில உலக நிசப்த ஆண்டாகக் கொண்டாடலாமே!

— ஓம்மத் - பாபு

# உங்கள் அன்னையின் அறிவுரையை நம்புங்கள்




உங்கள் குழந்தை
அழும் போது
உங்கள் பாட்டி
சொன்னதைப் போலவே
உங்களையும்
உபயோகிக்கச் சொல்வார்
**உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டரை**

100 ஆண்டுகளுக்கும் மேலாக
தாய்க்குலம் நம்புவது



OPCM-1-75 TAM



'ஹிந்து' பத்திரிகையின் புகைப்பட நிருபர் ஸ்ரீ கே. நாராயணச்சாரி அவர்களின் புதல்வி சௌ. **வனஜாவுக்கும்** செல்வன் **திரு ஆர். சௌந்தரராஜனுக்கும்** மேற்கு மாம்பலம் மிதிலாபுரி திருமண மண்டபத்தில் 23-11-75 அன்று வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு 'ஹிந்து' பத்திரிகையின் நிர்வாக ஆசிரியர் திரு ஜி. நரசிம்மன், துணை ஆசிரியர் திரு பலராமன் மற்றும் பத்திரிகைத் துறை நண்பர்களும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர்.

வாழ்க வனஜா—சௌந்தரராஜன்



ஸ்ரீ *N. S.* சிவா அவர்களது குமாரன் சிரஞ்சீவி **S. பஞ்சாபகேச சிவாவுக்கும்** ஸ்ரீ *M. M.* அப்பய்யா அவர்களது குமாரி சௌபாக்யவதி **கவிதாவுக்கும்** **5-11-75** அன்று சென்னை உட்லண்ட்ஸில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்

பெரும் அளவில் தாம் பங்கு கொண்ட தமிழிசை இயக்கத்துக்கென, கச்சேரிகளுக்கு ஏற்ற கீர்த்தனை வடிவில் அவர் பாடல்கள் இயற்றவில்லைதான்; அவருடைய மற்ற இலக்கியப் படைப்புக்களுக்கும் வேறு பொறுப்புக்களுக்கும் இடையே அதற்கு வேண்டிய நேரமும், வாய்ப்பும் இல்லாமற் போயிற்று. ஆனால் தாம் செய்ய இயலாததைப் பிறர் செய்வதற்கு அவர் ஊக்கம் ஊட்டினார்; அவர்களை வெகுவாகப் பாராட்டினார்.

அப்படிப் பாராட்டப்பட்டவர்களில் ஒருவர் அவருடைய இலக்கிய நண்பர் பெரியசாமித் தூரன். அந்த நண்பரின் சாகித்தியத் தொகுப்பு ஒன்றுக்கு கல்கி எழுதிய முன்னுரை, பாடலாசிரியரைப் பற்றிய பாராட்டுடன், தமிழிசைப் பாடல்கள் பற்றிப் பொதுவான சில கருத்துக்களையும் வெளியிடுகிறது:

''பழைமையைத்தான் கையாளுவோம், புதியதைத் தொடவே மாட்டோம்'' என்றால், கலைகள் காலத்துக்கேற்ப வளர்ச்சி அடைவது தான் எப்படி? அவ்வப்போது புதிய தண்ணீர் பாயாத குளத்தைப் போலக் கலையும் தேக்கமடைந்து வற்றிப் போய்விடக் கூடும் அல்லவா? ஆகையால், கலை உலகில் புதுமைக்கும் இடம் இருக்க வேண்டும்.

புதிய சாகித்தியங்கள் வரவேண்டியதுதான். ஆனால் அவை பழைமையை ஒட்டி அமைந்திருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும்; இன்றியமையாத பண்புகள் பொருந்தி இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும்...

ஸ்ரீ தூரனின் சாகித்தியங்களில் உயர்தர சங்கீதத்துக்கு உரிய சிறந்த பண்புகள் எல்லாம் அமைந்திருக்கின்றன. சாகித்யங்களில் அவர் கையாளும் தமிழ் எளிதாயும் இனிதாயும் இருக்கிறது. உணர்ச்சி ததும்பிக் கவிதா சந்தம் பொருந்தி யிருக்கிறது. நம் முன்னோர்கள் கையாண்டு பண்பட்ட பாணியில் ஸ்ரீ தூரன் சாகித்தியங்களை அமைக்கிறார். சங்கீத வித்வான்கள் அடுக்கடுக்காகச் சங்கதிகளைப் பொழிந்து பாடக் கூடியவாறு, பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் அமைக்கிறார்.

ஸ்ரீ தூரன் ஒரு கவிஞர். அவருடைய இதயம் தூய்மையானது; இசை மயமானது. ஆகையால் பாடல்களில் இயற்கையாகவே தமிழ் வளமும் இசையும் ஊடுருவி நிற்கின்றன.

(தொடரும்)

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மதுரை சத்குரு சங்கீத சமாஜத்தின் ஆதரவில் லக்ஷ்மி சுந்தரம் ஹாலில் ஸ்ரீமதி அம்புஜம் கிருஷ்ணவின் பாடல்களைக் கொண்டு 'கிருஷ்ண வைபவம்' சங்கீத நிகழ்ச்சியைத் தொகுத்தளித்தார் வித்வான் மதுரை ஸ்ரீ என். கிருஷ்ணன் அவர்கள். இந்த இனிய வைபவத்தில் சங்கீத நிகழ்ச்சியைத் தயாரித்தளித்த சங்கீத வித்வான் ஸ்ரீ கிருஷ்ணனைக் கௌரவித்துப் பொன்னாடை போர்த்தினார்கள். மதுரை உதவி மாவட்ட நீதிபதி பி. டி. சீனிவாசாச்சாரியார் இந்தச் சங்கீத நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிச் சிறப்பித்தார்.





சங்கீத வித்வான் கனக்காடு ஸ்ரீ ராமநாராயணன் அவர்களால் முப்பத்தெட்டுக் கீர்த்தனங்களாக அமைக்கப்பெற்று ஆசாரியாளின் அருள்வாக்குப்படி ''லலிதா கீத நாராயணம்'' என்று மகுடமிடப்பெற்று, இரண்டு எல்.பி. இசைத்தட்டுக்களில் பதிவு செய்யப் பெற்ற ஸ்ரீ லலிதா சகஸ்ரநாமக் கீர்த்தனங்கள் மயிலை பாரதிய வித்யாபவனில் அண்மையில் வெளியிடப்பெற்றன. நீதிபதி வி. சேதுராமன் அவர்கள் பாகவதரிடமிருந்து முதல் இசைத் தட்டுக்களைப் பெற்றுக் கொண்டார்.

# பக்கிரியும்

மதுரையம்பதியில் சித்திரைத் திருவிழா. சித்திர விசித்திர கோலாஹலத்துடன் சொக்கனும் சொக்கியும் வீதி உலா வருகிறார்கள். ஆயினும், உண்மையைச் சொல்ல வேண்டுமாயின், ஊர்வலத்துடன் வருவோரில் பல்லோர் சொக்கியிருப்பது இந்தத் திவ்யத் திருமூர்த்தங்களில் அல்ல. பவனி முன்னே மன்னார்குடி சின்னப் பக்கிரி நாகஸ்வரத்திலிருந்து பொழிந்த நாதப் பிரவாகத்தில் தான் அவர்கள் திளைத்துக் கொண்டிருந்தனர். அவரும் ரஸிகர் ஊட்டிய உத்ஸாகத்தில் புங்கானு புங்கமாக இசை வழங்கினார்.

'இதென்ன? கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னைச் சூழ்ந்துள்ள கூட்டம் குறைகிறதே. காற்றிலே மேகம் கலைகிறாற் போல. ஒரு வேளை மழை மேகங்கள் விரைந்து வருகின்றனவோ?' — சின்னப் பக்கிரி வானத்தைப் பார்க்கிறார். 'இல்லை. மழை அறிகுறியே இல்லை. அப்படியே மழை வந்தாலும் கூட இம் மாநகர ரஸிகர்கள் இசை மழையை விட்டு நகர மாட்டார்களே! இப்போதோ, சுற்றியிருந்த கூட்டம் பெரும்பாலும் கரைந்து, மீதமுள்ளவரும் ஓடுகிறார்களே! 'மீனம்மா, உன் சந்நிதானத்திலேயே, பண்பறிந்த உன் ஊர் ஜனங்கள் ஒரு கலைஞனை அவமானம் செய்யும்படியாக நான் என்ன அபசாரம் செய்தேன்?'

அவமானம் செய்யப்பட்டால் அது ஒரு கலைஞனின் மானாபிமானத்தைத் தொடாமல் இருக்குமா? ஏதோ ஓர் ஆத்திரத்தில், இன்னது செய்கிறோம் என்று தமக்கே புரியாமல் ஓடுகிற பக்தர்களின் பின்னோடு சின்னப் பக்கிரியும் சென்றார், கச்சேரியை அரைகுறையில் நிறுத்தி. உத்ஸவ மூர்த்திகளையும், பின் வந்த வேத பாராயண கோஷ்டியையும் தேவார ஓதுவாமூர்த்திகளையும் கடந்தவுடன், ''ஆஹா, இது என்ன?'' என்று திகைக்குத் திட்டு நின்று விட்டார்.

**கண்குளிரக் காண்பதெல்லாம்**
**கனவாய் நினைவாகும்போது**

என்ற சொற்கள் செவி குளிர, கருத்து குளிர, அந்தரான்மாக் குருத்தே குளிரச் சின்னப் பக்கிரிக்கு[illegible] அமுதக் கமானிலே குமுகுமுத்துப் பாய, [illegible]க உலகமும், அதன் மானாபிமானமும், அவமான வெகுமானங்களும் அவரைப் பொறுத்த மட்டில் வெறும் கனவாய், வெற்று நிழலாய்த் தேய, நாதப் பிரம்ம லோகத்திலேயே புகுந்து விட்டதாகத் தோன்றியது.

இப்படியும் ஓர் இசை உண்டா? இதய அடிவாரத்திலிருந்தே அல்லவா புனித உணர்வுகள் இசை உருக்கொண்டு பொங்கு புனலாக வழிகின்றன?

அந்தப் பொங்கு புனல் சின்னப் பக்கிரியின் ஆத்திரக் கங்குகளை அணைத்து விட்டது. ஓதுவார்களுக்குப் பின் வந்த பஜனை கோஷ்டியின் மையத்திலிருந்து எழுந்த அந்த ஜீவ நாதத்தை நோக்கி அவரது கால்கள் தாமாகப் பெயர்ந்தன.

ஆயிரம், பல்லாயிரம் கால்களைத் தன்பால் பெயர்த்து வரச் செய்து, இப்போது அவர்கள் கண்டமெல்லாவற்றையும் நாமாவளிகளை இசைக்கச் செய்த அக்குரல் கணீரென ஒலித்தது:

**சம்போ புராரே சங்கர புராரே**
**சூலதர பணிவர கங்கண புராரே**

கீர்த்தனம் இசைத்த குரல் சங்கீர்த்தனம் செய்கிறது. குரல் இரண்டாம் பட்சம்தான். ஏனெனில், இது வாய்ப் பாட்டல்ல; இதயப் பாட்டு. சாகித்யம், சங்கீதம், சாரீரம் யாவும் பாவம் என்ற ஒன்றிலேயே கரைந்து விட்ட நிஜமான நாத வித்யை.

எப்படியோ கூட்டத்தைப் பிளந்து சென்று, நடுவே நிற்கும் அந்த அதிசயப் பாடகரைப் பார்த்தார் பக்கிரி. அம் மனிதரிடம் துளிக் கூட அதிசயமில்லை. அதிசயமில்லாவிட்டால் போகிறது. சாமானிய மனிதருக்குள்ள கவர்ச்சிகூட இல்லாத தோற்றம் — இத்தனை மக்களை கானத்தால் கவர்ந்தவருக்கு! குள்ளமாக, ஒல்லியாக தூக்கிய, கன்னமும், பல்லும் பனிஷமாக ஒரு மூன்று முழத்துண்டை இடுப்பில் சுற்றிக் கொண்டு, வற்றலான திறந்த உடம்போடு நிற்கிறார். சுமார் இருபத்தைந்து வயதே இருக்கக் கூடிய அவர். ஆயினும் சாரீரத்துக்கும் மேம்பட்ட சங்கீதக்



# பரதேசியும்

ரா. கணபதி

கலையே அவரது சரீரத்துக்கும் ஒரு புனிதக் களையை ஊட்டித்தான் இருக்கிறது என்று பக்கிரியின் பக்குவ மனத்துக்குத் தெரிந்தது.

**பேர் ஆதரிக்கும் அடியவர்தம்**
**பிறப்பை யொழித்துப் பெருவாழ்வும் பேறும்**

விருத்தம் தொடங்கி விட்டார். அதென்ன மோஹனமப்பா? என்ன கன — நயம்? என்ன பிரு — ஸங்கு? மோகிக்கச் செய்யும் இந்த மோஹனமே மோகமெல்லாம் அறுத்துப் பிறப்பையொழித்துப் பெருவாழ்வும் பேறும் தந்து விடுமே!

**சேவல் கொடியாய்! திருச்செந்தூர்த் தேவா!**
**தேவர் சிறைமீட்ட செல்வா!**

உள்ளம் பிழி, ஸாவேரியில் கண்டிக் கண்டி, சுழற்றி சுழற்றி அவர் முருகனை அழைக்க, அவனது முறுவல் முகமே அவைவர் கண்களிலும் கட்டி நிற்க,

**என்று உன் திருமுகத்தைப் பார்த்து மகிழ்ந்து**

—அவர் ஒவ்வொரு பதத்தையும் சுவைத்துச் சுவைத்துப் பைரவியாக்கி வெளியிடுகிறார்.— அதிலே ''பைரவி பெற்ற பெருங்கனல்'' புயலாகிக் கேட்போரின் நாடி நரம்புகளிலெல்லாம் பாய்கிறான்.

சின்னப் பக்கிரி, தமது பாட்டைப் பாதியில் விட்டு ஓடி வந்த மதுரை மக்களுக்கு மனத்துக்குள்ளாக சபாஷ் போட்டார். கலைஞனின் தன்மானக் கோபம் அவனே ரஸிகனான போது பாராட்டாக உருமாறி விட்டது.

**அப்பா வாவா என்றுனைப் போற்றிப்**
**பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்**
**வாராதிருக்க வழக்குண்டோ?**

இல்லவே இல்லைதான். பூர்வ கல்யாணியின் அபூர்வ கமகங்கள் கமகமத்துக் கொண்டு துளும்பித் துளும்பித் தன் பரிவை, மகிழ்ச்சியைக் கொட்டி அவனைக் கூப்பிடும்போது அப்பன் வந்து அதில் அளையாதிருக்கவும் இயலுமா?

சூழலையும் தம்மையும் மறந்து, இசையே தாமாகிப் பாடியவர் முருகனையே கட்டி இழுத்த போது, அவரிடம் சின்னப் பக்கிரி தான் ஓடாதிருக்க முடியுமா?

**வள்ளி கணவா வருக வருகவே**

என்று புனித மத்யமாவதி பூரண மங்களத்தை நிறைத்துப் பூர்த்தி செய்தபோது, சின்னப் பக்கிரி கண்ணீரும் கம்பலையுமாக அந்த 'அஷ்டாவக்ர' இளைஞரின் காலில் நெடுஞ்சாண் கிடையாகக் கிடந்தார்.

மன்னார்குடி தந்த ஸங்கீத மன்னாதிமன்னனை அடிபணிய வைத்த அந்த இளம் பரதேசி யார்?

ஆண்டிப் பரதேசி என்பதற்கு அதிகமாக எவருக்கும் தெரியவில்லை. அவர் ஊரும் பேரும் சொல்லிக் கொள்ளாமலே, எவரையும் — உணவோ உறையுளோ கேளாமலே இப்படி க்ஷேத்திரம் க்ஷேத்திரமாக கான கைங்கரியம் செய்து வருகிறாராம். கும்பகோணத்தில் மகமா, நாகப்பட்டினத்தில் ஆடிப் பூரமா, திருவாரூரில் ரிஷபவாகனமா, திருவையாற்றில் ஸப்த ஸ்தானமா, எங்கானாலும் இவரது ஸப்த ஸ்வர உத்ஸவத்தைப் பரமேசுவரன் பெற்று வருகிறானாம். அந்த ஸங்கீதச்சொத்தை விடுத்துப் பார்த்தால், கட்டிய துண்டு தவிர ஒற்றைச் சோமன், விபூதிப்பை, ஒரு நோட்டு, பிழுக்கைப் பென்சில், அருட்பாப் பிரதி ஒன்று இவை தவிர ஓர் உடைமையும் இல்லாதவர். மூன்றே இழைப் பூணூல் பிரம்மசாரிதான் என்று தெரிவிக்கிறது. மனத்தாலோ சந்நியாசியே! கரமனை நீலகண்ட தாஸரின் தீந்தமிழ்ப் பாடல்களை ஏராளமாகப் பாடுவதால் அவரது சீடர், என ஊகிப்பதற்கு அதிகமாக இவரது வாழ்க்கைக் குறிப்பேதும் எவருக்கும் தெரியவில்லை. தெரிந்துதான் என்ன? வெளியே தெரிவது அவரில் அவரான இசை. அதுவேதான் எவரையும் ஈர்த்து விடுகிறதே!

இந்தப் பரதேசியுமே இப்படி இன்னொருவர் இசையால் ஈர்க்கப்பட்ட சுவாரசிய சம்பவமும் ஒன்றுண்டு.

தமது சஞ்சாரத்தில் ஆலங்குடிக்கு வந்து, அங்கு ஊருக்கு வெளியே உள்ள சோலையில்





## மதிப்புக்குரியவர் மரியாதை செலுத்தினர்!

அந்த நாளில் பிரபலமாயும் மதிப்புக்குரியவர்களாயுமிருந்த பல வித்வான்கள் வீணை தனம்மாளுக்கு மிகுந்த மரியாதை செலுத்தினர். ஒரு கல்யாணத்தின்போது தனம்மாள் சேர்ந்தாற்போல் நாலு நாளும் இரவில் கச்சேரி செய்யக் கேட்டிருக்கிறேன். அப்போது அனந்தராம பாகவதர், பூச்சி சீனிவாச அய்யங்கார், திருக்கோடிக்காவல் கிருஷ்ணய்யர், அனகநம்பி, சித்தனுச்சார்யா வி. ஆர். சீனிவாச அய்யங்கார் போன்ற சங்கீத உலக ஜாம்பவான்கள் முன்னணியில் அமர்ந்து ரசித்தார்கள்.

—டி. டி. கே.

'அக்ஞாதவாஸம்' செய்த போது. இந்தப் பொல்லாத சர்ப்பு இவரைச் சந்திக்க இழுத்தது! ''ஊஹூம். சிக்கப்பட மாட்டேன்'' என்று அவரும்தான் வீம்பு செய்து பார்த்தார். ''வீண் சண்டை வேண்டாமென்று தானே ஊருக்கு ஒதுங்கி வந்திருக்கிறேன்? போதும், நான் அடக்கத்தை விட்டு அன்று மன்னார்குடியில் நட்ட நடு ஸதஸில் போட்ட சண்டை. சங்கீத சிம்மம் கோனேரி ராஜபுரம் வைத்தியநாத அய்யரிடம் அல்லவா, கண்டைக்காயான நான் சண்டை போட்டு விட்டேன்? என்ன செய்யலாம்? மஹா வித்வானானாலும் ஒருவர் பொருள் உணராமல் பாடினால் இந்தக் கண்டைக்காயின் ரத்தம் கொதித்து விடுகிறதே! அன்றைக்கு அவர் பாவத்தையே மனசில் வாங்கிக் கொள்ளாமல் 'எந்துரு பெத்தல'வைப் பேத்தலாக்கியதும், அந்த வெறும் சப்த ஜாலத்துக்கே ஜனங்கள் ஆஹாகாரம் செய்ததும், சங்கராபரணம் — தியாகராஜ ஸ்வாமிகள் — ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி மூவருக்கும் செய்த மகா அபசாரமாகத்தான் எனக்குப் பட்டது. இந்த லக்ஷணத்தில் **நாத வித்யா மர்மம்புலநு தெலிஸி** என்று அவர் பலுக்கியது கேலிக் கூத்தாகி என்னைக் குத்திக் கிளப்பி விட்டது. ''இந்த 'மஹா' ஸங்கீதத்தை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்'' என்று நடு சபையில் கத்தி விட்டு வெளியேறி விட்டேன். ஆறு மாதம் பின் இன்று நான் இங்கே வந்த போதேயா, அந்த மஹா வித்வானும் இங்கு கச்சேரிக்கு வர வேண்டும்? பாட்டும் வேண்டாம், சண்டையும் வேண்டாம் என்று நான் பாட்டுக்கு ஊர் எல்லைக்கே ஓடி வந்தால், அவருடைய சமுத்ரகர்ப்ப சாரீரம் இங்குமா என்னைத் தொடர்ந்து வந்து, காம்போதி அலைக் கரங்களால் என்னை வா வா என்று அழைக்க வேண்டும்? ரஸிகனாக இருந்தால் மானம், த்வேஷம் எதுவுமே பாராட்டி நம் 'சுய மரியாதை'யைக் காத்துக் கொள்ள முடியாது போலிருக்கே!''

ஊரை எல்லாம் நிசப்தத்தில் ஆழ்த்தி விட்டு, 'கோனேரி ராஜபுரம்' என்ற நிறைந்த ஏரி பாவத்தில் உருகிய பக்தித் தரங்கங்கள் அந்தப் பரதேசி இளைஞரின் செவிகளில் மோதின.

**அடுத்து வந்த என்னைத் தள்ளலாகாது.**
**அரஹரா என்று சொன்னாலும் போதாதோ?**

அந்த ஸங்கீதமே தம்மிடம் 'தள்ளலாகாது' என முறையிடுவதாக இளம் ஆண்டிக்குத் தோன்றிற்று. 'ஆஹா ஹா, எப்பேர்ப்பட்ட அபசாரம் செய்கிறேன்? காம்போதி ராகம் — கோபாலகிருஷ்ண பாரதி — நான் நாளும் வழுத்தும் ஹரநாமம் இவை அற்பனான என்னிடம் வந்து வேண்டவா?'

அதன் பின் அவர் வாராதிருக்க வழக்கில்லை. காந்தத்தால் சர்ப்புண்ட ஊசியாகச் சோலைகளையும், சாலைகளையும் விறுவிறுவெனக் கடந்து கச்சேரிப் பந்தலுக்குள் ஓடினார். மகா வித்வான் என்பதைவிட மகா பக்தராகவே இன்று ஆகியிருந்த கோனேரிராஜபுரத்தின் முன் நின்றார். பேசவில்லை. தாரை தாரையாக வழிந்த கண்ணீரே பேச்சுக்கெல்லாம் மேலான பொருளைப் பேசி விட்டது.

அன்றிலிருந்து ஏழாண்டுகள் பாடகரும் பரதேசியும் இணைபிரியாதவர் ஆயினர். தம்மை விட வயதில் மிகச் சிறிய ஆண்டியை வித்வான் தமக்கு அர்த்தஞானம் உணர்த்திய சகாவாகவே மதித்தார். ஆண்டியோ வித்வானைத் தமது ஸங்கீத ஞானத்தைப் பூர்த்தி செய்வித்த குருநாதனாகவே வணங்கினார். பல்லாண்டுக்குப் பின், தமது ஸாஹித்தியங்களில் நூற்றினைக் கொண்ட முதல் தொகுதியை அந்த ''குருநாத''னுக்கே ஸமர்ப்பணம் செய்தார்.

ஆம், பிற்காலத்தில் ஸாஹித்யகர்த்தர்களின் முடிமணியான பிரம்ம ஸ்ரீ பாபநாசம் சிவன்தான் அந்தப் பரதேசி. உண்மையில் அவர் ஊர் பாபநாசம் அல்ல; பேரும் சிவன் அல்ல. போலகத்தில் பிறந்த ராமையாதான் அவர். அநாமதேய காலத்தில் ஒரு முறை கணபதி அக்ரஹாரத்தில் துலாமாத பஜனையை அதுலமாகச் செய்தார். பரவசமுற்ற ஊர்ப் பெரியவர் ஸ்ரீ ஸாம்பசிவய்யர், ''சிவனைப் பாடிப் பாடி உலகையே சிவமயமாக்கும் இவரே சிவன்தான்'' என்றார். அதுவே அவர் பெயராகி விட்டது. பிற்பாடு விதி இவரை விளையாட்டுப் பொம்மையாக்கி, சந்நியாசியாக வேண்டியவரை ''வறுமையும் பிணியும் மலிந்து, மக்கள் மனை சம்சார பந்தம் உற'' வைத்த போது, பாபநாசத்தில் இவர் குடித்தனம் வைத்ததால் பாபநாசம் சிவனானார். இன்னொரு விதத்திலும் பாபநாசம்தான். மானாபிமானம் எனும் பாவத்தையே நீக்கும் கானநுபூதியல்லவா அவருடையது? என்றும் அவரது கீதங்கள் இப் பாபநாச பணி புரிந்து வருமென்பது திண்ணம்.

# மனிதாபிமானம் வென்றது!

போட்டிக் கதை-15.

அந்தச் சிறிய ரயில்வே ஸ்டேஷனில், அங்கொருவரும், இங்கொருவருமாக நாலைந்து பேர்களே, 'வடக்கே போகிற வண்டிக்காக'க் காத்திருந்தார்கள். டிக்கெட் கலெக்டர் அறைக்குள் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த 'ஸ்டேஷன் டிக்கெட் பரிசோதகர்' — திடீரென்று, 'நினைப்பு' வந்தவராக, கைக் கடிகாரத்தைப் பார்த்தார்; இரவு மணி 7-30.

'....7—59க்கு வடக்கே போகிற வண்டி வந்துவிடும்....' — என்று நினைத்தவராக, அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளிப்பட்டார். ஸ்டேஷனின் பெரும் பகுதி இருளில் மூழ்கிக் கிடந்தது..

வடக்கே போகிற வண்டி வந்து பிளாட்பாரத்தை ஆக்கிரமித்தது! இறங்கும் பயணிகள் அனைவரும், ஒவ்வொருவராக — டிக்கெட்டை, பரிசோதகரிடம் தந்து விட்டுச் சென்றனர்.

ரயில் புறப்படுவதற்கான 'விசில்' ஊதியாயிற்று; முதல் வகுப்புப் பெட்டிக்கு எதிராக வந்ததும், டிக்கெட் பரிசோதகரின் கால்கள் தாமாகவே நின்றன. பெட்டியினுள் பார்வையைச் செலுத்தியவர், அடுத்த நிமிடம் பெட்டியினுள் பாய்ந்து சென்று, ஆசனத்தின் கீழ்ப் பகுதியில் 'பதுங்கிக்கொண்டிருந்த' சுமார் பன்னிரண்டு வயதுள்ள ஒரு 'பரட்டைத்தலைப் பையனை'த் தரதரவென்று வெளியே இழுத்து வந்தார்.

வண்டி 'வடக்கு' நோக்கி நகர்ந்ததும்.... இடக்கு பண்ணும் பையனை.... ஸ்டேஷன் டிக்கெட் கலெக்டர் அறைக்குள் தள்ளி... தாமும் நுழைந்த மறுகணம், அறையின் உட்புறம் தாளிட்டார்!

''ஏண்டா, திருட்டு ராஸ்கல்...! டிக்கெட் வாங்காம.... ஏற... 'இது' என்ன, 'உங்கப்பன் வீட்டு வண்டி'ன்னு நெனைச்சியா?''

பையனிடமிருந்து பதிலேதும் இல்லை!

உரத்த குரலில் கேட்டார்:

''ஏண்டா, திருட்டு நாயே! நீ கெட்ட கேட்டுக்கு உனக்கு பஸ்ட் கிளாஸ் கம்பார்ட்மெண்டாடா கேட்குது...? உன் டிராயர்லே என்னடா வைச்சிருக்கே....?''

கேட்டுக் கொண்டே அந்தப் பையனின் 'அண்டர்வேர்' பாக்கெட்டுக்குள் அவசரமாகக் கையை விட்டார். பாவம், அந்தப் பையனின் டிராயர் பை அநியாயமாகக் கிழிந்திருந்தது!

மீண்டும் தணியாத கோபத்துடன் உறுமினார்: ''ஏண்டா, திருட்டுப் பயலே! டிக்கட் இல்லாமே ரயில்லே போறது தப்புன்னு.... தெரியுமில்லே.......?''

''தெரியுமுங்க.....!''

''பின்னே, ஏண்டா, 'திருட்டு ரயில்' ஏர்றே? உன்னை வெறுமே வாயாலே கேட்டா ஒழுங்காச் சொல்லமாட்டே! இடுப்பு, பெல்ட்டைக் கழற்றி ரெண்டு விளாசு விளாசினேன்னு, உண்மையைக் கக்கிப்பிடுவே....!''

''ஐயையோ! இல்லீங்க.....! நான் இப்படிப் போறது இதுதாங்க முதல் தடவை.... இதுவே கடைசித் தடவையுங்கூடங்க! இனிமே இப்படிச் செய்யமாட்டேங்க.....!''

''ஹூம்! இது எல்லாத் திருட்டுப் பசங்களும் வழக்கமாச் சொல்ற பல்லவிதாண்டா! அது சரி....! துரைவாளுக்கு அப்படி என்ன அர்ஜெண்ட் எங்கேஜ்மெண்டோ?'' என்று வெறுப்பு கேலியாக மாறி, தேவையற்ற மரியாதையில் வந்து இறங்கியது.

பையன் குறுகிப் போனான்!



''ஐயா! என்னை வார்த்தையாலேயே கொல்லாதீங்க....! எங்கப்பாரு என் சின்ன வயசிலேயே செத்துட்டாரு....! அடுத்த ஸ்டேஷன்கிட்டே இருக்கிற கிராமத்திலே எங்காத்தாளும் செத்துட்டதா சேதி கேட்டுச் செத்துப்போன ஆத்தாளைக் கடைசி முறையா பார்க்கிறதுக்காகத்தான்.... வேறே வழியில்லாமே இப்படி ரயிலேறினேன். நான் அநாதையாயிட்டேங்க....! என்னை நம்புங்க நான் சொல்றதெல்லாம் சத்தியமுங்க!.... வேணுன்னா, நீங்களும் எங்கூடவே வந்து.... கிராமத்திலே பாருங்க. நான் சொன்னதெல்லாம் நெசம்தான்னு புரிஞ்சிப்பீங்க!''

பையன் கண்களில் 'தாரை தாரையாகக் கண்ணீர் கொட்டியது!

டிக்கெட் பரிசோதகருக்குத் தர்மசங்கடமாகப் போய்விட்டது! இருந்தும் வெளிக்குக் காட்டிக் கொள்ளாதவராக அதே மிடுக்கான குரலில் பேசினார்:

''உன்னை மாதிரி சோமாறிப் பயல்களை நம்பவே கூடாது....! கோவணத்திலேகூட, காசை ஒளிச்சு வைச்சிருப்பானுவ....!''




''கோவணந்தாங்க கட்டியிருக்கேன்! நீங்க சொல்ற மாதிரி வேறே ஒண்ணும் வெச்சிக்கிட்டு இல்லீங்க....! என்னை நம்புங்க.... சாரு!''

பரிதாபமாகக் கெஞ்சினான் பையன்.

ஊஹூம்! பரிசோதகர் நம்பத் தயாராயில்லே! மின்னல் வேகத்தில் பாய்ந்து அவனது டிராயரை அவிழ்த்தெறிந்தார்! அடுத்துக் கோவணத்தையும்....!

டிக்கெட்டுக்குக் காக பெயராத கோபத்தைத் தணித்துக் கொள்ள.–

பிறந்த மேனிக்குப் பையனை ஸ்டேஷன் பிளாட்பாரம் முழுவதும் ஓட வைத்துத் தாமும் அவனைப் பிடித்துக் கொண்டு ஓடினார்.

'பிறத்தியானுக்கு வந்த மானத்தை மதிக்காமல், இப்படி ஓட ஓட ஏன் விரட்டுகிறார்?' என்று எண்ணமிட்ட தண்டவாளத்துக்குப் பாவம் ஏனோ சிரிக்க முடியவில்லை!

பாவம்! பையன் தனது இரு உள்ளங் கைகளாலும் மானத்தைப் பொத்திக் கொண்டே ஓடி அறைக்குள் அடைக்கலம் புகுந்த பின்பும்—

அவனது தலை –

தரையைவிட்டு மேலெழும்பவே மறுத்தது! தாய் இறந்த துக்கத்தையும் விழுங்கிவிட்டிருந்த அப்போதைய அவமானத்தால் அவன் மெல்ல விசும்பிக் கொண்டிருந்தான்.

''அவ்வளவு மான அவமானம் இருக்கிறவன் மரியாதையா டிக்கெட் வாங்கிட்டு இல்லே, வண்டி ஏறியிருக்கணும்? உனக்கெல்லாம் இரக்கம் காட்டினா... பாவம்தான் வந்து சேரும்! இப்ப டிக்கெட் பணத்துக்கு என்னடா பதில் சொல்லப் போறே?''

''ஏழை அனாதையாலே, என்ன பதில் சொல்ல முடியுமுங்க?''

''இப்படி வக்கணையா பேசற நீ, டிக்கெட் வாங்குறதுக்கு என்னடா கேடு?''

'' வாங்கக் கூடாதுன்னு இல்லீங்க!..... வாங்கப் பணம் ஏதுங்க என்னிடம்.... ''

''அதுக்காக ஏறிட்றதா, திருட்டு ரயில்?''

''இந்த ரயிலே விட்டுட்டா, எங்கம்மாவே இனிமே.... எப்பவுமே.... பார்க்க முடியாதுங்களே!''

அபராதம் விதிக்கலாம் என்றாலோ பையனிடம் ஒற்றைப் பைசாகூட இல்லை! பணத்தைக் கட்டுவதற்கு வேறு எவருமற்ற அனாதையாக அல்லவா இருந்து தொலைக்கிறான்?.... 'ம்...! இப்படிச் செய்தால் என்ன? ஆங்....! அதுதான் சரி!'

''ஏண்டா, உன்னைப் போலீசிலே ஹாண்ட் ஓவர் பண்ணிடலாம்னு பார்க்கிறேன்! ஒரு வாரம் 'லாக்கப்'பிலே தள்ளினா, தன்னாலே உனக்குப் புத்தி வந்துடும்!''

''ஐயா, ஐயா! உங்க கால்லே விழுந்து கெஞ்சிக் கேட்டுக்கறேன், சாமீ! அது மட்டும் செய்யாதீங்க, ஐயா! நான் நடந்து போயாவது இன்னிக்கு இல்லாட்டியும்... நாளைக்குப் 'பால் தெளிக்கிற அன்னிக்காவது' ஆத்தா 'செத்த இடத்தையாச்சும்' பார்ப்பேன்.... சாமீ....! என்னை செயில்லே அநியாயமா அடைச்சுடாதீங்க, சாமீ! நான் வேணும்னு குத்தம் செஞ்சேன்? நான் ஏழையாப் பொறந்தது என் குத்தமா? டிக்கெட்டுக்குக் காசு இல்லாமெ கடவுளு என்னெப் படைச்சா.... அதுக்கு நான் என்ன செய்வேன், சாமீ? சித்த கருணை காட்டுங்க சாமீ!''

கதறினான் பையன்.

பையனின் வார்த்தைகள் பரிசோதகரின் மனத்தை ஆழமாகத் தொட்டன!

கடமை உள்ளம் கொண்ட பரிசோதகரும், மனிதாபிமானம் கொண்ட பரிசோதகரும் ஆக இரு கூறுகளாக அவரது இருதய மேடையில் எதிர் எதிராகப் பிரிந்து நின்று பேச ஆரம்பித்தனர்.

'அப்போ உன் ஜபர்தஸ்து எல்லாம்.... இந்தப் பையன் வரையில் விட்டுவிட வேண்டியதுதானே?'

இது கடமைக்காரர்!



## கார்த்திகை விளக்கு !

எவ்வளவு காற்று அடித்தாலும் அகல் விளக்கு அணையாமல் இருக்க இதோ ஒரு வழி. அகலில் எந்த எண்ணெய் வேண்டுமானாலும் உபயோகியுங்கள். ஒரு வெள்ளைத் துணியில் உப்பைப் பொடி செய்து வைத்துச் சுருட்டி அதை எண்ணெயில் நனைத்து அதையே திரியாக எரியவிடுங்கள்.

நூறு விளக்கென்ன - ஆயிரம் விளக்கே ஏற்றுங்கள். சூறாவளியே அடிக்கட்டும். அகல் அமராது. எண்ணெய் உள்ளவரை எரியும்.

— கண்ணன்

---

'பணத்தை வெச்சுக்கிட்டு 'வேணும்னே' ஏய்க்கிறவங்களைத்தான், தண்டிக்கணும் ! இந்தப் பையன் அப்படி இல்லையே...?'

' வேணும்னு, செய்தாலும்.... வேண்டாம்னு செய்தாலும் குற்றம் குற்றம்தானே?'

'அதெப்படி? ஏழையாக.... யாருமற்ற... அனாதையாகப் பிறந்தது பையனின் குற்றமா?'

'இப்படி யெல்லாம் 'ஆராய்ச்சி' செய்து கொண்டிருந்தால், குற்றம் செய்பவர்கள், எல்லோரும் சுலபமாகத் தப்பிச் சென்றுவிடுவார்கள்!'

'இவனையும், நான் தண்டிக்கத்தானே செய்தேன் ?'

'எப்படி ?'

'காசு கொடுக்க முடியாதவனை, பிறந்த கோலத்தில் ஸ்டேஷனைச் சுற்றி ஓடச் சொல்லி அவமானப்படுத்திய ஒன்றே போதாதா ?'

'போதாது! அவனைப் போலீசில் ஒப்படை!'

'ஆத்தாள் செத்த இடத்தையாச்சும் பால் ஊத்துகிற நாளைக்காவது பார்க்க வேண்டும்' என்று பையன் கெஞ்சிய பரிதாபம் அவர் மனத்தை உலுக்கிற்று....

அவனைப் போலீசில் ஒப்படைத்து ஒரு வார காலம் அரசாங்கத்துக்கும் தண்டச் செலவு வைத்து, செத்தவளைப் பார்க்கக்கூடப் போக விடாதபடி தடுத்துப் பையனின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதால் அவன் கட்டவேண்டிய பணம் வந்து விடுமா? புகைமூட்டமாகக் காட்சி யளித்த கடமைக்காரரைச் சற்றுப் பலவந்தமாகப் பின்னுக்குத் தள்ளி விட்டு, புதிய தீர்மானத்திலே பிறந்த உற்சாகத்தைக் குரலில் தோய்த்து, உறுதியாகக் கூறினார் — மனிதாபிமானக்காரர்:

''இந்தாடா, பையா! இந்த ரெண்டு ரூவா பணத்துக்கு ஒரு குதிரை வண்டி பேசி, இன்னிக்கே உன் ஆத்தாளைக் கிராமத்திலே போய்ப் பாரு! கடைசி முறையாக ஒரு தடவையாவது நீ உன் ஆத்தாளைப் பார்த்துத்தான் ஆகணும். இதை எந்தச் சக்தியாலும் தடுத்து நிறுத்த முடியாது!''

ஸ்டேஷனில் பிறந்த மேனிக்குத் தன்னை ஓட ஓட விரட்டிய கடமை வீரரின் உருவம் பையனின் மனத் திரையினின்றும் அறவே மறைந்து... அதே இடத்தில் மனிதாபிமானம் மிக்க பரிசோதகரின் கம்பீரமான உருவம் சிறுகச் சிறுக வளர்ந்து முடிவில்லாத விசுவரூபமாக விண்ணை முட்டி நின்றது.

---



## ஓடெஸ்ஸா ஃபைல்

ஹிட்லர் ஆட்சியில் யூதர்கள் பட்ட இன்னல்கள் கொஞ்ச நஞ்சமல்ல. லட்சக் கணக்கானவர்கள் ஈவு இரக்கமின்றிக் கட்டுக் கொல்லப்பட்டனர். சித்திரவதைக்கு உள்ளாயினர். இப்படிப் பல கஷ்டங்களுக்கு உள்ளான ஸாலமன் டாபர் என்ற ஒரு யூதன் தான் பட்ட தொல்லைகளை யெல்லாம் ஒரு நாட்குறிப்பேட்டில் குறித்து வைத்திருந்தான். அமெரிக்க ஜனாதிபதி ஜான் கென்னடி சுட்டுக் கொல்லப்பட்ட அன்று டாபரும் தற்கொலை செய்து கொண்டிருக்கிறான். அவன் எழுதி வைத்திருந்த நாட்குறிப்புப் புத்தகம் பீட்டர் மில்லர் என்ற இளம் பத்திரிகையாளர் வசம் சேர்கிறது. அந்த நாட்குறிப்பேட்டைப் படித்த பீட்டர், ஹிட்லரின் நாஜி ஆட்சியில் ரோஷ்மன் என்ற தளபதி இழைத்த கொடுமைகளையே டாபர் எழுதி வைத்திருந்தார் என அறிகிறான்.

அதைப் படித்ததிலிருந்து அந்த அரக்கனைக் கண்டுபிடித்துப் பழிவாங்க வேண்டும் என்று பீட்டருக்கு உணர்ச்சி எழுகிறது.

அந்தப் பழிகாரன் ஜெர்மனியிலேயே வேறு பெயரில் மிக வசதியாக வாழ்கிறான் என்றும் இப்படிப்பட்ட நாஜிக் கொலைகாரர்கள் ஓடெஸ்ஸா என்ற ஓர் அமைப்பு ஏற்படுத்திக் கொண்டு மீண்டும் தங்கள் பழைய செல்வாக்கை நிலைநாட்ட முயல்கின்றனர் என்பதையும் அறிகிறான்.

ரோஷ்மனைக் கண்டுபிடிக்க ''ஓடெஸ்ஸா'' சங்கத்தில் தானும் சேர்ந்து மாறு பெயர், மாறு உருவத்தில் செயல்பட்டு உண்மையைக் கண்டுபிடித்துப் பழிவாங்கும் படலமே இக்கதை.

பீட்டர் என்ற அந்தப் பத்திரிகை நிருபரின் காதலி 'ஸிஜி'. இவர்களின் நளினமான காதலும் பீட்டரின் லட்சிய வேகமும் முடிவில் எதிர்பாராத் திருப்பங்களும் சேர்ந்து நல்ல தரமான படம் பார்க்க விரும்புவர்களுக்கு வேண்டிய அளவு திருப்தி தருகிறது.

—எஸ்.வி.எஸ்.




சமீபத்தில் சென்னையில் கண் நோய் பரவிப் பிரபலமடைந்தது. அவரவர் கண்களைக் கசக்கிக்கொண்டு, 'ஆ, ஊ, ஓ' என்று உயிர் எழுத்துக்களிலேயே அங்கலாய்த்துக் கொண்டார்கள். ஆனால் அந்த 'மெட்ராஸ்-ஐ' அடியேனை அணுகவில்லை. இதை எண்ணி நான் இன்றும் வருத்தப்படுகிறேன்.

இதில் வருத்தப்படுவதற்கு என்ன இருக்கிறது என்று நீங்கள் கேட்காவிட்டாலும் நான் பதில் கூறத்தான் போகிறேன்.

பாருங்களேன், ஆபீசுக்குப் போகிறேன். மொத்தம் நாலு குமாஸ்தாக்களில் மூன்று பேர் லீவு போட்டிருந்தார்கள். மானேஜர் வந்தார். ''என்னய்யா உனக்குக் கண் நோய் எதுவும் வரவில்லையா? அவர்கள் மூணு பேருக்கும் 'மெட்ராஸ்-ஐ' வந்து விட்டிருக்கிறது'' என்றார். மற்றவர்களோடு ஒத்துப் போகாது தனியாகப் புரட்சி செய்கிற சமூக விரோதி மாதிரி என்னை அவர் கருதியிருக்க வேண்டும்!

''இல்லே சார்... நான் தினமும் காலையில் வெந்நீரால் கண்ணை அலம்பிக் கொண்டிருக்கிறேன். அதனால்...''

''அதனால் என்னய்யா? நாங்கள் மட்டும் சும்மாவா இருக்கிறோம்? என் மிஸஸுக்கு இரண்டு நாளாக வலி'' என்றார்.

''எப்படியாவது நாளைக்குள் கண் நோயை வரவழைத்துக் கொள்கிறேன்'' என்று நான் சொல்லி இருந்தால் அவருக்குத் திருப்தி ஏற்பட்டிருக்கும்!

● ''அடபாவி! உனக்குக் கண் நோவே வரவில்லையா?... மூன்றும் வருஷம் ஏஷியன் ஃப்ளு வந்தது. அப்பவும் உனக்கு ஒண்ணும் வரவில்லே. ஏன் அறுபத்து ஒன்பதிலே டெங்கு ஜுரம் சபதம் இட்ட திரௌபதி மாதிரி தலை விரித்து ஆடியது. அப்பவும் உனக்கு ஒரு மண்ணும் வரவில்லே.... உன் உடம்பிலே ஏதோ கோளாறு இருக்கிறது'' என்று முடித்தான் சக ஊழியன் திருமலை, கண்களைக் கசக்கிக் கொண்டே!

''போகட்டுமடா... மெட்ராஸ்-ஐ உனக்கு வந்தால் என்கிட்டே வா. நல்ல ஹோமியோபதி மருந்து நான் தருகிறேன்'' என்றான்.

இதே மாதிரி இன்னொரு நோவுக்கார நண்பன், ''லேசாகக் கண் நோவு வந்த உடனே சொல்லு. ஒரு ஏ-ஒன் பாட்டி வைத்தியம் வைத்திருக்கிறேன்'' என்றான்.

கடைசியில் நோவு எனக்கு வரவேயில்லை. அவர்களின் ஆலோசனையை நான் கேட்க வாய்ப்பே இல்லை. இருந்தும், ''அவன் பெரிய மனுஷன். நாம் சொல்வதை எல்லாம் ஏற்பானா?'' என்கிற மாதிரி கருவினார்கள்.

இவர்களை விடுங்கள். என் மனைவி இருக்கிறாளே, அவள் பொழிந்த வசைமாரியைக் கேளுங்கள்....

''நீங்களும் இருக்கிறீர்களே, என்ன பிரயோசனம்? எதிர் வீட்டு ராமானுஜம் கண் நோவு என்று நாலு நாட்களாய் வீட்டில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். ஒட்டடை அடிச்சார், பரணை ஒழித்துச் சுத்தம் பண்ணினாராம். பசங்களை அவர் பார்த்துக் கொண்டதால் மிஸஸ் ராமானுஜம் அண்ணாநகர் எக்ஸிபிஷன் என்ன, அகாடமி டான்ஸ் என்ன, கச்சேரி என்ன, ஞாயிற்றுக்கிழமை திருவேற்காடு என்ன என்று போய் வந்தாளாம், ஜாலியாக.... ஹூம்.... அதுக்கெல்லாம் கொடுத்து வைத்திருக்கணும்!... இந்த அழகில் அவள் கேட்கிறாள், 'என்னடி, உன் வீட்டுக்காரருக்குக் கண் நோவு எதுவும் வரவில்லையா? என் வீட்டுக்காரர் பெரிய ஆபீசில் இருக்கிறாரோ இல்லையோ அதனால் பொழுது போனால் பொழுது விடிந்தால் ஆயிரத்தெட்டுப் பேர், 'ராமானுஜம், ராமானுஜம்' என்று வந்து விடுகிறார்கள். அப்படி வருகிறவர்களில் யாரோ ஒருத்தன் அன்பளிப்பாகக் கண் நோவு கொடுத்து விட்டான்...' மிஸஸ் ராமானுஜம் இப்படிச் சொல்வதன் அர்த்தம் என்ன தெரியுமா? நீங்கள் பாத்திரச் சீட்டுக் கம்பெனியில் குமாஸ்தாவாக இருப்பதை இடித்துக் காட்டுகிறாள்!''

ஆண்டவனே, என்னை மிஸஸ் ராமானுஜம் போன்ற பெண்களின் வாயிலிருந்து காப்பாற்று!

● பஸ், ஓட்டல், கிளப் எங்கு போனாலும் அவரவர் தங்கள் கண் நோவைப் பற்றிப் பெரிய திருவிழாவைப் பார்த்துவிட்டு வந்த மாதிரி விவரிப்பார்கள். நான் மட்டும் 'பே' என்று அவர்களைப் பார்த்துக் கொண்டிருப்பேன். எனக்குக் கண் நோவு அனுபவம் இல்லையே!

அடுத்த தடவை இந்த மாதிரி ஏதாவது ஒரு வியாதி ஊரில் பரவினால், நான் முதலில் ஒரு டாக்டரிடம் போய் ஆலோசனை கேட்கப் போகிறேன்: ''அன்புள்ள டாக்டரே, இந்த நோயை வரவழைத்துக்கொள்ள வழி சொல்லுங்கள்!''

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# உம்மிடி சாரதி ஜூவல்லர்ஸ்

அளிக்கும்

# நகை சேமிப்புத் திட்டம்



ரூ. 3000, ரூ. 1500 குருப்புகள்

பெரு மதிப்புக்குரிய ஆதரவாளர்களுக்கு உம்மிடி சாரதி ஜூவல்லர்ஸ் மிகப் பெருமையுடன் அளிக்கும் புதிய நகை சேமிப்புத் திட்டம். இரு வகை குருப்புகள்: ரூ. 3000, ரூ 1500. மாதத் தவணை ரூ. 200, ரூ. 100. இது 15 மாதத் திட்டம், ஒவ்வொரு குருப்புக்கும் மொத்த அங்கத்தினர்கள் 100 மட்டுமே. பிரதி மாதமும் 15 தேதி அளவில் அதிர்ஷ்டசாலிகள் தேர்ந்தெடுக்கப்படுவர். அவர்கள் மேற்கொண்டு மாதத் தவணைகளுக்கு பணம் செலுத்த வேண்டியதில்லை. வெற்றி பெற்றவர்கள் தங்கள் பணத்திற்குரிய தேவையான தங்க நகைகளையோ, வெள்ளிப் பொருட்களையோ தேர்ந்தெடுக்கலாம்.

**அரிய பரிசு!**
சேரும் மெம்பர்களுக்கு முதல் தவணை செலுத்திய உடனேயே ஒரு அழகிய வெள்ளி குத்துவிளக்கு பரிசாகக் கொடுக்கிறோம்.

ADWAVE-VSJ-303



மேற்கொண்டு விபரங்களுக்கு:

## உம்மிடி சாரதி ஜூவல்லர்ஸ்

40. பாண்டி பஜார், மாம்பலம்.
சென்னை-600 017. போன்: 442500

- ஞாயிற்றுக்கிழமை கடை திறந்திருக்கும்.
- செவ்வாய்க்கிழமை விடுமுறை

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு